# கொலம்பியா

வெளியீடு!

மாடர்ன் தியேட்டர்ஸ்

தலைவாங்கி

# அபூர்வசிந்தாமணி

## டாக்கிப்பாட்டுகள்

C.T. ராஜகாந்தம்
காளி N. ரத்னம்

பழனி
R. பாகீரதி

காளி N. ரத்னம்
P.S. கோவிந்தன்

GE. 6460
உள்ளுக்குள்ளே
C.T. ராஜகாந்தம்
வச்சேன்னு
வச்சதுதான்

GE. 6461
பாரேன் பாங்கி
யாரே எனக்கெதிரே

GE. 6463
முத்துமல்லிகை
காளி N. ரத்னம் டபாட்டு
ஊமைப்பாட்டு



G.H. RAO

ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்
மவுண்ட் ரோட், மதராஸ். 2

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/128, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

1 — 89-2.



# Sound Sleep

## an important factor......

......ஆரோக்கியத்தை நிலை நிறுத்தி, தேகம், நரம்புகள், மூளை ஆகியவைகளுக்கு மறு நாள் உழைக்கப் புத்துணர்ச்சி ஏற்பட வேண்டுமானால், போதிய உறக்கம் இன்றியமையாதது. அதே போல சருமத்தை சுத்தமாக வைத்துக் கொள்ள மிகவும் இன்றியமையாதது மலபார் லிம்டா சோப்.

இதன் நுரை சருமத்திற்குள் வெகு தூரம் சென்று அழுக்கையகற்றிப் போக்கி, சருமத்தை மிருதுவாக்கி, உங்களுக்கு அழகிய மேனி அழகு அளிக்கிறது. உங்களுக்கு ஏற்ற சோப் அதுவே.






மலபார்

# லிம்டா சோப்

FAS-L-3-9

வெஜிடபில் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக்கோட்டை

புரோப்ரைடர்ஸ்: சேட் N.P. & கோ கள்ளிக்கோட்டை. பம்பாய் 2. சென்னை 1.

# அடமின்

அதிக ஜீவசத்துள்ள சுரமீன் எண்ணெய்

## தேகாரோக்யத்தையும் புஷ்டியையும் அளிக்கும்

சிறந்த ஆரோக்யத்துக்கு ஏ & டி விடமின்கள் ஏராளமாக அவசியம். பூரண ஆரோக்யமும் அபூர்வ வலிமையும் தரும் சிறந்த டானிக் என்று அடமின் விடமின் ஆயில் நிரூபணமாயுள்ளது.




அனுபானம்: 5 முதல் 10 துளிகளை நாலு அவுன்ஸ் பால் அல்லது ஆரஞ்சு ரசத்தில் கலந்து தினசரி 3 முறை சாப்பாட்டுக்குப் பின்னர் உட்கொள்ளவும்.

**கவர்ன்மெண்டு ஆயில் பாக்டரி**
**காலிகட்**

.ADS.

சென்னை மாகாணத்துக்கும், அதன் அருகாமையிலுள்ள சமஸ்தானங்களுக்கும் ஏஜண்டுகள்:

**மெஸர்ஸ் பாரி அண்டு கோ., லிமிடெட் சென்னை**

# ஸ்ரீமதி எம்.எஸ்.சரோஜினி

நடிக்கும்

## பக்ஷிராஜாவின்

# கன்னிகா

## டாக்கீ பாட்டுகள்



மிஸ். ஹேமா மாலினி

N. 18367

நடனமாடினார்

(2 பாகங்கள்)

ஸ்ரீமதி எம்.எஸ்.சரோஜினி

N. 18368

யானை முகனே

வெள்ளிமலை

ஸ்ரீமதி எம்.எஸ். சரோஜினி

& "குமரன்"

N. 18369

யாரோ வந்து

(2 பாகங்கள்)

ஸ்ரீமதி எம்.எஸ். சரோஜினி

N. 18370

என்ன ஆனந்தம்

ஸ்ரீமதி எம்.எஸ். சரோஜினி

& "குமரன்"

நடராஜன்

## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"




தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்

டம்டம் — பம்பாய் — மதராஸ் — டில்லி

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 } இதழ் 31 } பிப்ரவரி 29 { சர்வஜித்து ௵ மாசி 17





டில்லிமாநகரில் யமுனா நதிக்கரையில் உள்ள ராஜகாட் இன்று இந்தியாவின் தலைசிறந்த புண்ணியஸ்தலம் ஆகிவிட்டது. காந்தி மகானுடைய புனிதத் திருமேனியினால் அக்கினிதேவன் தன்னுடைய பாவங்களையெல்லாம் போக்கிக்கொண்டு தூய்மை பெற்ற இடத்தில் ஒரு மேடை கட்டி அதைச்சுற்றிக் கிராதி எழுப்பியிருக்கிறார்கள். தினந்தோறும் அம்மேடை காந்திஜியின் பக்தர்கள் கொண்டுவரும் புஷ்பங்களால் மூடப்பட்டுக் காட்சி தருகின்றது. காலையிலும் மாலையிலும் பலர் வந்து தரிசனம் செய்கிறார்கள்; பிரார்த்தனை செய்கிறார்கள். காந்திமகானின் அருமைப் புதல்வர்களான ஸ்ரீ ராமதாஸ் காந்தி, ஸ்ரீ தேவதாஸ் காந்தி, ஸ்ரீமதி தேவதாஸ் காந்தி ஆகியவர்கள் நடுங்குகின்ற குளிரில் மகாத்மாவின் மேடையருகில் அமர்ந்து பிரார்த்தனையில் ஆழ்ந்திருப்பதைக் கீழேயுள்ள படத்தில் காணலாம். தலையை வெள்ளைக் கதராடையினால் மூடியிருப்பவர் ஸ்ரீ ராமதாஸ் காந்தி. அவருக்கு அருகில் காவி உடைதரித்துத் தலையில் மிகப் பெரிய காவித்துணித் தலைப்பாகையுடனும் நரைத்து வெளுத்த தாடியுடனும் அமர்ந்திருக்கும் துறவி திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த தம்பிரான்; டில்லிக்கும் அலகாபாத்துக்கும் சென்று காந்திஜியின் அந்தியக் கிரியை மகிமைகளைப் பார்த்துவிட்டு மிகப் பிடிவாதமான முயற்சிகள் செய்து திருவாவடுதுறையில் தக்க காந்திஜி ஞாபகச்சின்னம் எழுப்புவதற்காக அவருடைய அஸ்தியில் ஒரு பகுதியைச் சம்பாதித்துக் கொண்டு வந்தவர்.




மேலே, தங்கள் அருமைத் தந்தையின் அஸ்தியை—தேசத்தின் பிதாவின் திருமேனியில் எஞ்சியிருந்த பகுதியைப்—பிரயாகை க்ஷேத்திரத்தில் கங்கை யமுனா சரஸ்வதி சங்கமத்தில் கரைத்துவிட்டுத் திரும்பிப் புதுடில்லி ரயில்வே ஸ்டேஷனில் வந்திறங்கிய ஸ்ரீமதி லக்ஷ்மி தேவதாஸ், ஸ்ரீ தேவதாஸ், ஸ்ரீ ராமதாஸ் ஆகியவர்களின் தோற்றத்தைக் காணலாம். காந்தி மகான் இப் பூவுலகில் வாழ்ந்திருந்த நாட்களில் ஸ்ரீ தேவதாஸும் ஸ்ரீ ராமதாஸும் உறவின் உரிமையைப் பாராட்டாமல் தேசத்துக்கே அவரை அர்ப்பணம் செய்திருந்தார்கள். இன்று அவர்களுடைய துயரத்தைக் கோடிக்கணக்கான மக்கள் பகிர்ந்து அனுபவிக்கிறார்கள். உலகில் ஒப்பற்ற தந்தையைப் பிரிந்த தனயர்களுக்கும் சொந்தப் புதல்வியைக் காட்டிலும் பன் மடங்கு அதிகமாக மகாத்மாவின் அன்பைப் பெற்றிருந்த ஸ்ரீமதி லக்ஷ்மிக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

-சாஸ்திரி


















மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 31

# என்ன சேதி?

## சரிசமானமாக வாழ்வோம்

"வகுப்பு வெறிப்பேயுடன் போராடிக்கொண்டே மகாத்மா காந்தி உயிர் துறந்தார். ஆகையால், வகுப்புத் துவேஷத்தை அறவே ஒழித்து, சமூகங்களிடையே சமாதானமும் அன்னியோன்னிய பாவமும் ஏற்படப் பெரு முயற்சி செய்யவேண்டும். அதற்காக அரும்பாடுபடுவதென்று நாம் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளவேண்டும்" என்று டில்லியில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் காங்கிரஸ் அக்ராசனரான பாபு ராஜேந்திரப் பிரசாத் குறிப்பிட்டுள்ளார்.

சுதந்திர இந்தியாவின் நிரந்தரமான அரசியல் அமைப்பு, மதத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கப் போவதில்லையென்பதும், ஜனநாயக உரிமைகளையே அடிப்படையாகக் கொண்டிருக்குமென்பதும் இப்போது நிச்சயமாகி விட்டது. ஜாதி சமயம் மதம் முதலிய எவ்வித வேற்றுமையுமின்றி இந்தியப் பிரஜைகள் சகலருக்கும் சரி சமானமான உரிமைகள் உண்டு. சமுதாயம், அரசியல், பொருளாதாரம் முதலிய எல்லாத் துறைகளிலும் ஜாதி சமய மத பேதமின்றி எல்லாருக்கும் நீதி வழங்கப்படும். இத்தகைய உயர்ந்த கொள்கையை வற்புறுத்தி அ. இ. கா. கமிட்டியில் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை வரவேற்காதவர்களோ, அந்தத் தீர்மானத்தை அநுஷ்டானத்துக்குக் கொண்டு வருவதில் ஒத்துழைக்காதவர்களோ இருக்க முடியாது. ஏனெனில், நம் தேசத்திலுள்ள சகலருடைய கௌரவமும் க்ஷேமமும் சுபிட்சமும் அத்தகைய உயர்ந்த நியதி செயலில் நிறைவேறுவதையே பொறுத்திருக்கின்றன.

பாரதநாடு அன்னியரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலையடைந்து சுதந்திரம் பெறுவதற்காக அளவற்ற தொண்டும் தியாகமும் செய்த ஏகஸ்தாபனம் என்ற முறையில் காங்கிரஸ் கமிட்டி, மகாத்மாவின் மரணத்தைக் குறித்து தேச மக்களின் துக்கத்தையும் துயரத்தையும் பிரதிபலித்திருக்கிறது. அத்துடன், மகாத்மா காந்தி ஞாபகச் சின்ன நிதி திரட்டும் விஷயமாகவும் தேச மக்களுக்குச் சில யோசனைகளைக் கூறி மேற்படி கமிட்டியில் ஒரு தீர்மானம் நிறைவேறியிருக்கிறது.

## புது அமைப்புத் திட்டம்

காங்கிரஸின் புது அமைப்பு சம்பந்தமாகக் கமிட்டியில் நிறைவேறியுள்ள தீர்மானமும் முக்கியமானதாகும். காங்கிரஸின் லட்சியமான சுதந்திரம் கிடைத்து விட்டதால், இனி அது அரசியலிலிருந்து விலகிவிட வேண்டும் என்பது சிலருடைய அபிப்பிராயம். நாட்டில் சமாதானமும் சுபிட்சமும் ஏற்பட்டால் தான் சுதந்திரம் கிடைத்ததற்குப் பலனுண்டு. பெறுதற்கரிய சுதந்திரத்தை நாம் பெறும்படி செய்த காங்கிரஸினால் தான், நாட்டின் சமாதானத்துக்கும் சுபிட்சத்துக்கும் வழிகாட்ட முடியும். தவிர, இனிமேல் தான் காங்கிரஸ் ஆக்க வேலைகளில் தன் முழு கவனத்தையும் செலுத்த வேண்டுமென்று மகாத்மா காந்தி அடிக்கடி கூறி வந்திருக்கிறார். அதற்குத் தகுந்தவாறு காங்கிரஸைப் புதிய முறையில் அமைப்பதற்கான யோசனைகளையும் மகாத்மா காந்தி தமது கடைசி கைங்கர்யமாக எழுதி வைத்திருக்கிறார். அந்த யோசனைகளை ஆதாரமாகக் கொண்டுதான் காங்கிரஸின் புதிய அமைப்புத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எனவே, மேற்படி திட்டத்துக்குத் தேசமக்களின் பரிபூரண ஆதரவு கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

# குழப்பாதீர்கள்!

கோட்டிக் காரனுடைய புளுகு எட்டு நாளில் வெளியாகும்!

எட்டு நாளில் வெளியாகாவிட்டாலும் எட்டு வாரத்திலாவது வெளியாகிவிடும் என்பது ஸர் ஜாப்ருல்லாகான் விஷயத்தில் உண்மையாகி யிருக்கிறது!

ஐக்கிய நாடுகள் சபையில் பாகிஸ்தான்மீது இந்தியா ஒரு புகார் கூறினாள், இந்தியாமீது புகார்கள் அடங்கிய ஒரு மூட்டையைப் பாகிஸ்தான் அவிழ்த்து விடும் என்று மேற்படி சபைக்குச் செல்லுமுன் ஸர் ஜாப்ருல்லா பயமுறுத்தினார் அல்லவா? அந்த பயமுறுத்தலை அவர் பூரணமாக நிறைவேற்றி விட்டார்.

அவரது கூற்றுகள் எல்லாம் பொய் என்பதைக் குறிப்பாக அமெரிக்கர்களும் பிரிட்டிஷாரும் நன்கறிவர். இருந்தாலும் அவை யெல்லாம் உண்மை போலவும் அவற்றைத் தாங்கள் நம்புவதுபோலவும் பாசாங்கு செய்து, விஷயத்தைக் குழப்பிவிட்டிருக்கிறார்கள். ஏனெனில், அவ்வாறு குழப்பி விடுவதுதான் அவர்களுடைய சுயநலத்துக்கு ஏற்றது.

ஐக்கிய நாடுகள் சபையில் விவாதத்துக்கு வரும் எந்தப் பிரச்னையும் அதன் நியாய அநியாயத்தை அடிப்படையாகக் கொண்டு தீர்க்கப்படுவதில்லை என்பது காஷ்மீர் பிரச்னை மூலம் வெட்ட வெளிச்சமாகி விட்டது.

ஐரோப்பாவில் யாருடைய ஆதிக்கம் நிலைப்படுவதென்பது பற்றி பிரிட்டன்—அமெரிக்காவுக்கும் ருஷியாவுக்கும் போட்டி நடந்துவருவதுபோல், மத்திய கிழக்குப் பிரதேசத்திலும் போட்டி ஆரம்பமாகி யிருக்கிறது. அதனால் தான் மத்திய கிழக்குப் பிரதேசத்திலுள்ள முஸ்லீம் நாடுகளையும் குறிப்பாகப் பாகிஸ்தானையும் விரோதித்துக் கொள்ள பிரிட்டிஷ் — அமெரிக்கர் துணியவில்லை.

காஷ்மீரப் பிரச்னை விஷயமாக ருஷ்யா மௌனம் சாதித்து வருவதன் நோக்கமும் அதுதான்.

இந்தியா சுயநல நோக்கத்துடன் நடந்து கொள்ளுவதாயின், இந்தோனேஷ்யக் குடியரசின் கட்சியை இறுதி வரையில் ஆதரிக்க முற்பட்டிராது.

இந்தோனேஷ்யாவை ஆதரிப்பது வல்லரசுகளின் தயவை இழப்பதாகும் என்பது இந்தியா அறிந்த விஷயமே. அப்படி யிருந்தும் இந்தியப் பிரதிநிதிகள், ஆதிக்க வெறிபிடித்த வல்லரசுகளின் கட்சியை ஆதரிக்கவில்லை; நீதி எந்தப் பக்கம் இருக்கிறதோ அந்தக் கட்சியையே ஆதரித்தார்கள்.

எனினும் வல்லரசுகள் இறுதியாகச் செய்த நிர்மானம் இந்தோனேஷ்யாவுக்கு நீதி வழங்காமல், அந்த நாட்டில் சிதைந்து வரும் டச்சு ஏகாதிபத்தியத்துக்கு மீண்டும் உயிர் கொடுப்பதாக இருக்கிறது!

• • •

காஷ்மீர நிலைமையை யொட்டி பிப்ரவரி மாதம் 1-ந் தேதி இதழில் நாம் குறிப்பிட்டிருந்ததை நேயர்களுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறோம்.

“......எல்லைப்புற மலைச்சாதியார் ஆனானப்பட்ட பிரிட்டிஷாரையே கண்ணிலே விரல் கொடுத்து ஆட்டினார்கள். எனவே, அவர்கள் தங்கள் மலைக் கோட்டைகளையும் குகைகளையும் விட்டு இந்தியாவுக்குள் பிரவேசியாமலிருப்பதற்கு லஞ்சம் அல்லது கப்பம் அல்லது பொருளுதவியாக பிரிட்டிஷ் சர்க்கார் அவர்களுக்கு வருஷந்தோறும் லட்சக் கணக்காகப் பணம் கொடுத்து வந்தார்கள்! அவர்களைச் சமாளிக்கும் பொறுப்பு இப்போது பாகிஸ்தான் சர்க்காருடையது. பாகிஸ்தான் சர்க்கார் அவர்களுக்குப் பணம் கொடுக்கும் முறையைக் கையாளவில்லை; கையாளவும் மாட்டார்கள். எல்லைப்புற மலைச் சாதியாருக்கு வேறு போக்குக் காட்டி விடுவது அவர்களுக்குப் பலவிதத்திலும் சௌகரியமாயிருக்கும்! அதாவது, பாகிஸ்தானுக்கு ஒரு பொறுப்புமில்லாமல் இந்தியாவிலே புகுந்து கொள்ளை கொலைகளை நடத்த அந்த லட்சம் வீரர்கள், — துணிச்சலுக்கும் குரூரத்துக்கும் பெயர்போனவர்கள், — தயாரா யிருக்கிறார்கள்!......” என்று எழுதியிருந்தோம்.

நீதியிலும் தர்மத்திலும் நம்பிக்கை கொண்ட பிரபல பிரிட்டிஷ் பத்திரிகாசிரியர் ஒருவர் இப்போது அதே அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார்.

"நியூ ஸ்டேட்ஸ்மன் அண்ட் நேஷன்" பத்திரிகை ஆசிரியர் ஸ்ரீ கிங்ஸ்லி மார்ட்டின் காஷ்மீரத்துக்கு நேரில் சென்று அங்கு நடந்து வரும் போரைப் பார்வையிட்டார். பின்னர் அவர் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் எழுதியிருப்பதைப் பாருங்கள்:—

"காஷ்மீர விஷயமாக இந்தியாவின் கோரிக்கை யோக்கியப் பொறுப்புடன் பரிசீலனை செய்வதற்குரியது. எனவே, அதை மழுப்பிக் குழப்புவது கூடாது. ஆனால் அந்த நேரடியான பிரச்னையை ஐ. நா. சபை பரிசீலனை செய்ய மறுத்து விட்டது. அவ்வாறு மறுத்தது அச் சபையிலுள்ள முக்கிய வல்லரசுகளின் ஆதிக்க வெறியை வெளிப்படுத்தியிருக்கிறது.

"பாகிஸ்தானில் தங்களுக்கு ராணுவ தளங்கள் வேண்டும் என்பதற்காகவே ஆங்கிலோ — அமெரிக்கர்கள் பாகிஸ்தானை ஆதரித்து வருகிறார்கள் என்பது இந்தியர்களின் அபிப்பிராயம்.

"இந்தியா பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில் ஒன்றாக இருப்பதையே விரும்புமெனச் சில வாரங்களுக்கு முன்னால் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், இனிமேல் அவ்விதம் நம்புவதற்கில்லை. இந்தியா பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறவே கத்தரித்துக் கொண்டாலும் அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

"இந்தியாவின் வடமேற்கு எல்லைப் புறத்தை மலைச்சாதியாரிடமிருந்து காப்பாற்றுவதற்காக பிரிட்டன் ஏராளமான துருப்புகளை வைத்திருந்ததுடன், மேற்படி சாதியாருக்கு வருஷா வருஷம் லட்சக்கணக்கான பவுன் கப்பமும் கட்டி வந்தது. ஆனால் பாகிஸ்தானோவெனில், அவர்களை எதிர்க்கத் துருப்புகளையும் வைத்துக் கொள்ளவில்லை; கப்பமும் கட்டவில்லை. காஷ்மீரத்தைச் சூறையாடிக் கொள்ளையடிக்கும்படி மலைச்சாதியாருக்கு அனுமதி கொடுத்து விட்டது! இந்திய சர்க்கார் தலையிட்டிராவிடில், காஷ்மீரம் இதற்குள் மலைச்சாதியாரின் அட்டூழியங்களால் அழிந்து சாம்பலாகியிருக்கும்.

"பாகிஸ்தான், மலைச்சாதியாரை உற்சாகப்படுத்தி அவர்களுக்கு உதவியும் அளித்து வருகிறதென்பதில் சந்தேகமே இருக்க இடமில்லை."

பாகிஸ்தான் பிரதிநிதியின் புளுகுகளையும் பிரிட்டன், அமெரிக்கா முதலிய வல்லரசுகளின் ஆதிக்க வெறியையும் ஸ்ரீ கிங்ஸ்லி மார்ட்டின் மேற்கூறிய விதம் ஆதார பூர்வமாக அம்பலப் படுத்தியிருப்பதன் மூலம், உலகத்துக்கே சிறந்த தொண்டு புரிந்திருக்கிறார் என்று கூறுவது மிகையாகாது.

1914-18-ல் நடந்த உலகமகா யுத்தம் முடிந்ததும் யுத்தத்தில் ஜயித்தவர்கள் 'உலகில் இனிமேல் யுத்தமே ஏற்படாமல் செய்யும் நோக்கத்துடன் சர்வதேச சங்கம் என்று ஒரு சங்கத்தை ஸ்தாபித்தார்கள். சீக்கிரத்திலேயே அச் சங்கம் வல்லரசுகளின் ஆதிக்கப் போராட்டச் சங்கமாக மாறி, உலக சமாதானத்தை நிலைநாட்டச் சக்தியற்றதாயிற்று; கடைசியில் செத்து ஒழிந்தும் போயிற்று. இரண்டாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகு தோன்றிய ஐக்கிய நாடுகள் சபையும் மேற்படி சர்வதேச சங்கத்தின் கதியை அடையாதிருக்க வேண்டுமாயின், ருஷியா, அமெரிக்கா, பிரிட்டன் போன்ற வல்லரசுகள் சுயநல அரசியல் ஆதிக்கத்தை அடியோடு ஒழிக்க வேண்டும். எந்தப் பிரச்னையையும் நியாய அநியாயத்தைக் கவனித்துப் பாரபட்சமின்றிப் பரிசீலனை செய்ய வேண்டும்.

ஐ. நா. சபை உருப்பட அதுதான் வழி; வல்லரசுகளின் கௌரவம் நிலைக்க அதுதான் வழி; உலக சமாதானம் ஏற்படவும் உலகம் மீண்டும் மகத்தான பிரளயத்துக்கு இலக்காகாமல் தப்புவதற்கும் அதுதான் வழி.

---

**காந்தி அஞ்சலி — 9**

*சரித்திரப் பிரசித்திபெற்ற தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம் நடந்தபோது காந்திஜியைச் சிறையில் வைத்த பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ் கூறியது :—*

*"சுமார் ஒரு தலைமுறைக்கு முன் காந்திஜிக்கு எதிரியாயிருந்த நான், இப்போது அவரை ஒரு வீரராக வணங்க முன் வந்திருக்கிறேன். அவரைப் போன்ற மகான்கள் நம் போன்றவர்களைச் சாதாரண நிலைமையிலிருந்து உயர்த்துகிறார்கள்.*

*தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதே அவரிடம் எனக்கு விசேஷ மதிப்பு இருந்தது. ஆயினும், அவரை நான் எதிர்த்து நிற்கவேண்டி இருந்தது.*

*காந்திஜி சிறையில் இருந்தபோது தைத்த ஒரு ஜோடி செருப்புகளை, விடுதலையானவுடன் எனக்குப் பரிசாக அளித்தார். அதை வெகு காலம் வரை நான் உபயோகித்துக் கொண்டிருந்தேன். ஆனால், அந்த மகா புருஷன் தைத்த செருப்புகளைக் காலில் அணிய நான் தகுதியுடையவன் அல்ல என்ற உணர்ச்சி மாத்திரம் எப்போதும் இருந்துகொண்டே இருந்தது."*

# பஞ்சப் பாட்டும் கொஞ்சம் கூத்தும்

விவசாயி

நாளது பிப்ரவரி 10உ நமது சென்னைமாநகரில் சென்னை மாகாண உணவுக் கமிட்டியின் கூட்டம் ஒன்று நடந்தது. அந்தக் கூட்டத்தில் நம் பிரதம மந்திரி கனம் ஓமந்தூர் ரெட்டியாரும் உணவு மந்திரி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜனும் பஞ்சப் பாட்டின் பல்லவி அநுபல்லவிகளைப்பாடினார்கள்.

ராகம் : அரி(வி) காம்போஜி;
தாளம் : சோந்துத் தாளம்

பல்லவி

பருவமழை இல்லாமல்
பயிர்கள் விளையவில்லை
பஞ்சம் வரப்பார்க்குதே - அந்தோ! அந்தோ!
தஞ்சம் அளிப்பார் இல்லையே!

இவ்விதம் பிரதம மந்திரி ரெட்டியார் பஞ்சப் பாட்டின் பல்லவியைப் பாடி முடித்துப் பெருமூச்சு விட்டதும், உணவு மந்திரி டாக்டர் ராஜன் அவர்கள்,

அநுபல்லவி

தருணம் இதுவே காணீர்
தானியம் இருந்தால் தாரீர்
அருமையான யோசனை
அனைத்தும் இப்போதே கூறீர்!

என்று உச்சஸ்தாயியில் அநுபல்லவி பாடிவிட்டு இளைப்பாறத் தொடங்கினார். எடுத்த காரியத்தை விடக்கூடாதென்னும் பிடிவாதம் கொண்ட பிரதம மந்திரியார் மேலும் ஒரு சரணத்தைப் பாடினார்:—

சரணம்

காரணம் இல்லாமலே
காரியம் இல்லையன்றோ?
காரியம் செய்யாவிட்டால்
தானியம் விளைந்திடுமோ?
ஆரிட்ட தீவினையோ?
அரிசி ஸ்டாக் குறைந்து போச்சு!
ஆலைபடியினாலே
அதிக உற்பத்தி செய்வீர்!

பிரதம மந்திரியார் இவ்விதம் பாடிய பிறகு தாம் மட்டும் சும்மா இருக்கக்கூடாதென்று உணவு மந்திரி டாக்டர் ராஜன் இன்னொரு சரணத்தை எடுத்தார்:—

காந்திஜி சொன்னார் என்று
கண்ட்ரோலை எடுத்துவிட்டோம்!
கார்த்திகை மாதந்தன்னில்
கடுகளவு மழையும் இல்லை!
சாந்தி மனதில் இல்லை!
சாதம் அடுப்பில் இல்லை!
சற்றும் இந்த உத்தியோகம்
பார்க்கப் பிடிக்கவில்லை!

இரு மந்திரிகளும் பாடிய இந்தப் பஞ்சப் பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்த உணவுக் கமிட்டி அங்கத்தினர்களுக்குக் கரகோஷம் செய்து ஆரவாரிக்கக்கூடச் சக்தி இல்லாமல் பசி மூர்ச்சி விட்டது. அவர்கள் மிக்க சன்னஸ்வரத்தில் தங்களுடைய அருமையான யோசனைகளைப் பாடியபடியால் சாஹித்யம் அவ்வளவு தெளிவாகக் கேட்கவில்லை. அவர்களில் ஒருவர் பின்வருமாறு முனகியது காதில் இலேசாக விழுந்தது:—

ராகம் : பயங்கரம்; தாளம் : வேதாளம்

கண்ணிகள்

அக்ரி கல்ச்சரல் இலாகா ஒன்றிருக்குதாம்
அதன் — உதவி கிடைத்தால்
ஆழமாகக் கலப்பை உழுகுதாம்!
பாக்டரியில் செய்த டிராக்டர் இருக்குதாம்!
அதைப் — பார்த்தபேர்களின்
பசித்த வயிறு பெருத்துப் போகுதாம்!
உதவி செய்ய உத்தாரம் தாருமே!
உங்கள் — கவலை தீர்ந்து
பதவியில் என்றும் இருப்பீர் பாருமே!

இவ்வாறு ஒருவர் முனகிய பாட்டு விவசாய இலாகா டைரக்டர் ஸ்ரீ எம். எஸ். சிவராமன், ஐ. சி. எஸ். அவர்களின் காதில் விழுந்ததும் அவர் உடனே அரங்க மேடையில் தாவி ஏறிக் குதித்துக் கொண்டே பாடியதாவது:

ராகம் : அவசரம்; தாளம் : சடபட

தென்னை மரம்! தென்னை மரம்!
சென்னைக் கேற்ற தென்னை மரம்!
அங்கே அநுமதி கொடுப்பீரேல்
ஐம்பது லட்சம் பயிரிடுவேன்!
பஞ்சம் பஞ்சாய்ப் பறக்காதோ?
பட்டினி பசியும் தொலையாதோ?

உடனே உணவுக் கமிட்டி அங்கத்தினர்களுக்கு ஒரு மாதிரி போன பிராணன் திரும்பி வந்தது. அவர்களில் இன்னொருவர் மேடை மேல் குதித்தேறி விச்ராந்தியாகப் பாடிய சவுக்ககால கீர்த்தனை :

ராகம் : குலைப்பட்டினி    தாளம் : கப்பரை

பல்லவி

ஐந்து வருஷம்வரை பஞ்சம்காத் திருக்குமோ ?
இந்த வருஷக் கதை என்னவோ ?

இதற்குமேல் கேட்க விவசாய டைரக்டருக்குப் பொறுமை இல்லாமற் போனபடியால், அவர் மீண்டும் பழைய வர்ணமெட்டிலேயே பாடியதாவது :

பொட்டாட்டோ ! டொம்மாட்டோ !
(போங்கள் ! உங்களுக்குப் புரியவில்லை !)
உருளைக் கிழங்கு ! தக்காளி !
உலகில் அற்புத உணவன்றோ ?
சர்க்கரை வள்ளிக் கிழங்குண்டு !
சர்க்கார் பண்ணைகள் தான் உண்டு !

உணவுக் கமிட்டியில் தவறி வந்துவிட்ட விவசாயி ஒருவருக்கு மேற்படி விவசாய டைரக்டரின் பாட்டைக் கேட்டதும் வயிற்றெரிச்சல் அதிகமாகி விட்டது. அவரும் மேற்படி அவசர ராகம் சடபட தாளத்திலேயே வெளுத்துக் கட்டினார் :

ரொம்ப சரி ! ரொம்ப சரி !
ஜனவரிக் கப்புறம் பிப்ரவரி !
கம்பும் சோளமும் விளையாதோ ?
கடிதில் பஞ்சம் தீராதோ ?
பம்பும் விரைவாய்த் தருவீரே !
பெட்ரோலும் கொஞ்சம் கொடுப்பீரே !
வம்புப் பேச்சு வேண்டாமே !
வயல்கள் பேச்சால் விளையாதே !

இதைக் கேட்ட விவசாய டைரக்டரின் கண்கள் சாத்தூர் மிளகாய் வற்றலைப் போல் சிவந்து விட்டன. அவருக்கும் மேற்படி விவசாயிக்கும் கை கலந்துவிடும் போல் தோன்றவே, இத்தனை நேரமும் மௌனம் சாதித்துக் கொண்டிருந்த விவசாய இலாகா மந்திரி அரங்க மேடையில் ஆஜராகி அருமையாகப் பாடிய கீதம் :—

ராகம்; மலையான மகேஜூகரி; தாளம்; அவியல்

கண்ணிகள்

மந்திரி மாதவ மேனோன் நானே !
மந்திர தந்திரம் அறிந்திடுவேனே !
மரத்திலே அரிசி காய்க்கச் செய்வேனே !
உரத்தினில் உயர்ந்தது பசுந்தழைதானே !

இந்த இடத்தில் விவசாய இலாகா டைரக்டரும் மந்திரியுடன் சேர்ந்து கோஷ்டி கானம்செய்யத் தொடங்கினார்:—

ராகம் : நைதிய பைரவம்
தாளம் : பாதிதாளம்.

அச்ச மில்லை அச்ச மில்லை
அச்சமென்ப தில்லையே !
பச்சைத் தழை உர மிருக்க
அச்சமென்ப தில்லையே !
பத்து லட்சம் ஏக்க ராவில்
பசுந் தழையைப் பயிரிட்டால்
பத்துக் கோடி டன் அரிசி
பஞ்சம் தீரக் கிடைக்குமே !

தலையிலே வைத்த கையை எடுக்காமல் இவ்வளவு சங்கீதத்தையும் சாஹித்யத்தையும் கேட்டு அநுபவித்துக் கொண்டிருந்த உணவு மந்திரி டாக்டர் ராஜன் மேடைக்கு வந்தார். உடனே சபையில் நிச்சப்தம் நிலவியது. டாக்டர் ராஜன் சவுக்கத்தில் பாடினார் :

ராகம் : சோகமுரளி    தாளம் : தாம்பாளம்.

பல்லவி

ஏரியில் தண்ணீர் இல்லை
கேணியில் ஜலமே இல்லை !
எருவும் விதையும் இல்லையே !
எப்படிச் சொல்வேன் தொல்லையை !

அநுபல்லவி

நேரு அரசாங்கத்தார்
தாராளம் கொஞ்சம் காட்டி
ஏராளமாய் அரிசி
அனுப்பினால் பிழைப்போம் ஐயா !

இவ்வளவு நேரமும் யோக சாதனத்தில் ஆழ்ந்திருந்த பிரதமர் செட்டியார் மேற்படி சோக கீதத்தைக் கேட்டதும், "ஹா !" என்று சொல்லி மூர்ச்சையாகி விழுந்தார்.

பிரதமரைப் பின்பற்றி மற்றவர்கள் அனைவரும் அப்படி அப்படியே சோகம் போட்டு விழுந்துவிட்டார்கள்.

இப்படியாக மகாசபை உணவுக் கமிட்டியின் கூட்டம் இனிது முடிவடைந்தது.

உணவு இலாகா காரியதரிசி ஸ்ரீ குற்றாலலிங்கம் பிள்ளை மேற்படி உணவுக் கமிட்டி கூட்டத்தின் நடவடிக்கைகளை விவரமாக எழுதிப் புது டில்லியில் உள்ள மத்திய சர்க்காருக்கு அனுப்பி வைத்தார். உடனே மத்திய சர்க்காரின் புதிய உணவு மந்திரி ஸ்ரீ ஜெயராம் தாஸ் தௌலத்ராம் சென்னையை நோக்கி ஓட்டமாக ஓடி வந்தார்.

[ஓடிவந்து என்ன செய்தார் என்பதை அடுத்த இதழில் பார்க்கவும்]

# பிரயாகை - யாத்திரை

புது டில்லியிலிருந்து பிரயாகைக்குக் காந்தி மகானின் அஸ்தி கலசத்தை ஏந்திச் சென்ற தனி ரயிலில் நமது புகைப்பட நிபுணர் ஸ்ரீ எல்லிஸ் ஆர். டங்கனும் சென்றிருந்தார். இந்த யாத்திரையின் போது தாம் கண்ட காட்சிகளைப் போல் உலகம் தோன்றின நாள் தொட்டு யாரும் பார்த்திருக்க மாட்டார்கள் என்பது அவருடைய அபிப்பிராயம். ஸ்ரீ டங்கன் எடுத்த படங்களில் சிலவற்றை இந்தக் 'கல்கி' இதழில் நேயர்கள் காணலாம். இன்னும் சில அடுத்த இதழில் பிரசுரமாகும்.



புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட மகாத்மாவின் புனித அஸ்தி கலசத்தை ஏந்திக்கொண்டு பிப்ரவரி 11உ காலையில் ஸ்பெஷல் வண்டி புறப்பட்டது. டில்லி ரயில் நிலையத்தில் ஸ்பெஷல் ரயிலை வழி அனுப்பிவிட்டுப் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி வீடு திரும்புகிறார்.



டில்லி ரயில் நிலையத்தையும் அங்கே அஸ்தி கலசத்தின் கடைசி தரிசனத்துக்காகக் காத்திருந்த திரளான மக்களையும் விட்டு விட்டு ஸ்பெஷல் புறப்படுகிறது.

ரயிலுக் குள்ளே காந்தி மகானு டைய அருமைப் பேத்திகளும் மற்றும் ஆசிரம வாசிகளும் இரவு பகல் இடைவிடாமல் பிரார்த்தனையும் பகவத்கீதை பாராயணமும் ராம நாம பஜனையும் செய்து கொண்டிருந்தார்கள்.

• •

அலகாபாத் ஸ்டேஷனில் வரவேற்புக்காக வந்திருந்த ஜனங்களின் கூட்டம் எண்ணில் அடங்காதது. வாழ்நாளெல்லாம் மூன்றாம் வகுப்பு ரயிலில் பிரயாணம் செய்த மகாத்மாவின் அஸ்தி கலசமும் மூன்றாம் வகுப்பிலேயே அந்திம யாத்திரை செய்ததைக் கவனிக்கவும்.

அலகாபாத் நகரின் வீதிகளில் அஸ்தி கலச ஊர்வலம் தொடங்கி விட்டது.

• • •

ஊர்வலத்தின் மற்றும் இரு காட்சிகள். இந்தியாவின் தரைப்படை, கடற்படை, விமானப் படை வீரர்கள் அஹிம்சா மூர்த்தியின் அஸ்தி கலசத்துக்கு முன்னால் மரியாதை செய்து கொண்டு வழி நடந்தார்கள்.

வழியெங்கும் லட்சக்கணக்கான ஜனங்கள் தரிசித்தார்கள்; ஊர்வலத்தைப் பின் தொடர்ந்தார்கள்.

• • •





பத்திரிகை நிருபர்களும் புகைப்பட நிருபர்களும் ஏற்றிக்கொண்டு ஊர்வலத்தின் முன்னையில் பெரிய மோட்டார் லாரிகள் சென்றன (லாரிகளுக்கு முன்னால் ஸ்ரீ எல்லிஸ் ஆர் டங்கன் கால் நடையாகவே சென்று சுவர்களிலும் மரங்களிலும் ஏறிப் படங்கள் எடுத்தார்.)

சன்னியாசிகள் லாரி முகப்பில் அமர்ந்து கையில் ஒலிபெருக்கி வைத்துக்கொண்டு பகவத்கீதை பாராயணம் செய்தார்கள். ஆகாச விமானங்கள் பூமாரி பொழிந்து கொண்டு வானில் வட்டமிட்டன.

# அலை ஓசை





# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ராஜி

## 8. நாஸ்திகத்தில் வெறுப்பு

இங்கிலாந்தில் இரண்டு வருஷ வாசத்துக்குப் பிறகு பிரம்ம ஞான சங்கத்தைச் சேர்ந்த இரு சகோதரர்களுடன் மோகன் தாஸுக்கு சிநேகம் ஏற்பட்டது. அவர்கள் கீதை படித்துக் கொண்டிருந்தார்கள். மோகன் தாஸையும் தங்களுடன் படிப்பதற்கு அழைத்தார்கள். அதுவரையில் மோகனர் கீதை படித்ததில்லை. ஆங்கிலேயர் தூண்டும் வரையில் தாம் பகவத் கீதை படிக்கவில்லையே என்பதை எண்ணி அவர் வெட்கப்பட்டார். பிறகு அவர்களுடனே பகவத் கீதையின் சம்ஸ்கிருத ஸ்லோகங்களையும் ஸர் எட்வின் அர்னால்டின் மொழி பெயர்ப்பையும் படிக்கத் தொடங்கினார். பகவத் கீதை விலைமதிக்க முடியாத ஒரு ஞானப் பொக்கிஷம் என்று அவருக்குத் தோன்றியது. ஞான நூல்களில் பகவத் கீதைக்கு ஒப்பானது வேறொன்றுமில்லை என்பது மகாத்மா பிற்காலத்தில் கொண்ட உறுதியான தீர்மானம்.

காந்திமகான் தினந்தோறும் நடத்தி வந்த மாலைப் பிரார்த்தனைகளில் பகவத் கீதை இரண்டாவது அத்தியாய ஸ்லோகங்கள் பாராயணம் செய்யப்பட்டு வந்ததை நீ அறிந்திருப்பாய். அந்த இரண்டாவது அத்தியாய ஸ்லோகங்களில் இரண்டு ஸ்லோகங்களின் கருத்து பின் வருமாறு :—

“மனிதன் இந்திரிய விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பதனால் அவற்றில் பற்றுதல் உண்டாகிறது. பற்றுதலிலிருந்து ஆசை பிறக்கிறது: ஆசை குரோதமாகக் கொழுந்து விட்டெரிகிறது. குரோதத்தினால் சித்த மயக்கமும், நினைவுத் தவறுதலும் உண்டாகின்றன. நினைவுத் தவறுதலால் புத்தி நாசமடைகிறது. புத்தி நாசத்தினால் மனிதன் அழிகிறான்.”

மேற்படி கருத்துடைய பாகத்தினை ஸ்லோகங்களை முதன் முதலில் படித்த போதே மோகன் தாஸின் இதயத்தில் ஞான தீபத்தை ஏற்றிவைத்தன.

பிறகு அந்தச் சகோதரர்கள் கூறியதன் பேரில் ஸர் எட்வின் அர்னால்டின் “ஆசிய தீபம்” என்ற நூலையும் மோகன் தாஸ் படித்தார். “ஆசிய தீபம்” என்பது புத்த பகவானுடைய சரித்திரம். ஏற்கெனவே கருணையும் தயாளமும் குடிகொண்டிருந்த மோகன் தாஸின் உள்ளத்தை அந்த நூல் பெரிதும் கவர்ந்தது.

இந்த சமயத்தில் பெஸண்டு அம்மையார் பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்தார். அவரோடும் சங்கத் தலைவரான பிளாவட்ஸ்கி அம்மையையும் பார்ப்பதற்கு மேற்கூறிய சகோதரர்கள் மோகன் தாஸை அழைத்துச் சென்றார்கள். பிரம்மஞான சங்கத்தைச் சேரும்படியாகவும் அவருக்குச் சொன்னார்கள். “என்னுடைய சொந்த மதத்தைப் பற்றி இன்னும் நான் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லையே! அப்படித் தெரிந்து கொள்வதற்கு முன்னால் எந்த மதச் சங்கத்திலும் சேர நான் விரும்பவில்லை” என்று மோகன் தாஸ் சொல்லி விட்டார். ஆனாலும் பிரம்மஞான சங்கத்தார் நூல்களைப் படித்ததனால் பெரும் பயன் அடைந்தார். ஹிந்து மதத்தில் மூட நம்பிக்கைகளே அதிகம் என்று பாதிரியார்களின் பிரசாரத்தினால் ஏற்பட்டிருந்த அபிப்பிராயம் நீங்கிற்று.

சைவ போஜன சாலை யொன்றில் உத்தமரான கிறிஸ்தவர் ஒருவரை மோகன் தாஸ் சந்தித்தார். இராஜ கோட்டையில் படித்தபோது சில பாதிரிமார்களின் அபத்தப் பிரசாரத்தினால் கிறிஸ்தவ மதத்தைப் பற்றித் தமக்கு ஏற்பட்டிருந்த தாழ்வான

அபிப்பிராயத்தை அவரிடம் கூறினார். அந்தக் கிறிஸ்தவ நண்பர், "நான் புலால் உண்பதில்லை; மது பானமும் செய்வதில்லை; கிறிஸ்தவ வேதம் மது மாமிசம் அருந்தும்படி கட்டளையிடவும் இல்லை. நீர் தயவு செய்து பைபிள் வாசிக்க வேண்டும்" என்று கூறி, ஒரு பைபிள் புத்தகமும் வாங்கிக் கொடுத்தார்.

பைபிள் புத்தகத்தில் பழைய ஏற்பாடு மோகன்தாஸுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனால் புதிய ஏற்பாடும், முக்கியமாக ஏசுநாதர் மலைமேலிருந்து செய்த உபதேசங்களும், மோகன்தாஸின் இதயத்தில் இடம் பெற்று விட்டன. "தீமைக்குப் பதில் நன்மை செய்யுங்கள். வலது கன்னத்தில் அடித்தவனுக்கு இடது கன்னத்தையும் காட்டுக. உங்கள் சட்டையை ஒருவன் எடுத்துச் சென்றால் அவனுக்கு உங்கள் போர்வையையும் கொடுங்கள்!" என்னும் கிறிஸ்தவ சமயத்தின் சாரமான உபதேசங்கள் மோகன்தாஸுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தந்தன. பகவத் கீதையின் உட்பொருளும், "ஆசியஜோதி"யில் கண்டிய தத்துவமும், ஏசுநாதரின் உபதேசமும் சாராம்சத்தில் ஒன்றுதான் என்று மோகன்தாஸ் அறிந்தார். மொத்தத்தில், துறவும் தியாகமுமே மேலான சமய வாழ்க்கை என்ற நம்பிக்கை உண்டாயிற்று.

கார்லைல் எழுதிய "வீரரும் வீர பூஜையும்" என்ற நூலில் "வீர தீர்க்கதரிசி" என்னும் அத்தியாயத்தைப் படித்து முகம்மது நபி அவர்களின் கடும் விரத வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொண்டார். எனவே, இஸ்லாம் மதத்தின் பேரிலும் மோகன்தாஸுக்கு மரியாதை ஏற்பட்டது.

இதே காலத்தில் இங்கிலாந்தில் நாஸ்திகப் பிரசாரம் ஒரு பக்கத்தில் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. அதனால் மோகன்தாஸின் மனம் சலிக்கவில்லை.

இங்கிலாந்தில் சார்லஸ் பிராட்லா என்பவர் நாஸ்திகரில் பிரசித்தி பெற்ற நண்பர்.



ஸ்ரீமதி அன்னி பெஸண்ட்

இந்தியாவுக்காக ரொம்பவும் பரிந்து பேசியவர். ஒழுக்கத்திலும் ஜீவகாருண்யத்திலும் சிறந்தவர். ஆனால் அவர் "கடவுள் உண்டு" என்னும் நம்பிக்கை தமக்கு இல்லை என்றும், சன்மார்க்கமே உண்மையான சமயம் என்றும் சொல்லி வந்தார்.

சார்லஸ் பிராட்லா காலமானபோது அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்ட இடத்துக்கு லண்டனில் அப்போது வசித்த அநேக இந்தியர்களும் சென்றிருந்தார்கள். மோகன்தாஸும் சென்றிருந்தார். திரும்பி வரும்போது அவர் ஒரு ரயில்வே ஸ்டேஷனில் ரயிலுக்காகச் சிறிது நேரம் காத்திருக்க நேர்ந்தது.

புகைவண்டி நிலையத்தில் ஏகக் கூட்டமாயிருந்தது. கூட்டத்திலிருந்த நாஸ்திகர் ஒருவர் அங்கு நின்ற ஒரு கிறிஸ்தவப் பாதிரியாரை வீண்வம்புக்கு இழுத்தார்.

"நல்லது ஐயா, கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதாக நீங்கள் நம்புகிறீர்கள் அல்லவா?" என்று அவர் கேட்டார்.

"ஆம், நம்புகிறேன்" என்று அந்த உத்தமப் பாதிரியார் சாந்தமான குரலில் பதில் சொன்னார்.

"பூமியின் சுற்றளவு 28 000 மைல் என்பதையும் தாங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?" என்று அந் நாஸ்திகர் மிகச் சாமர்த்தியமாகக் கேள்வி போடுவதாக நினைத்துக்கொண்டு கேட்டார்.

"ஆம் ஆம்."

"அப்படியானால், தயவு செய்து சொல்லுங்கள். தங்கள் கடவுள் எவ்வளவு பெரியவர்? அவர் எங்கே இருக்கிறார்!"

"எமக்கு அறியும் திறன் உண்டானால், நம் இருவரின் இருதயங்களிலும் அவர் இருக்கிறார்" என்றார் பாதிரியார்.

"ஓ! இதுதானே வேண்டாம் என்கிறேன்? என்னைக் குழந்தை என்று நினைத்துக் கொண்டீர்களா!" என்று அந்த நாஸ்திக வீரர் கூறிவிட்டுப் பெரும்

வெற்றி அடைந்தவரைப்போல் சுற்றிலும் உள்ளவர்களைப் பார்த்தார்.

பாதிரியாரோ அடக்கத்தை அணிகலனாகப் பூண்டு மௌனம் சாதித்தார்.

இயற்கையிலேயே பண்பாடு பெற்ற மோகன் தாஸின் இளம் உள்ளம் மேற்படி வாக்குவாதத்தினால் நாஸ்திகத்தின் பேரில் அதிகமான வெறுப்புக் கொண்டது.

## 9. பாரிஸ்டர் ஆனார்

பாரிஸ்டர் பட்டம் பெறுவதற்காக அல்லவா மோகன்தாஸ் இங்கிலாந்துக்குப் போனார்? அது என்ன ஆயிற்று என்று இப்போது சொல்லுகிறேன்.

பாரிஸ்டர் ஆவது மிகவும் சுலபம் என்று ஜோஷிஜி கூறியது முற்றும் உண்மை. இந்தியாவில் உள்ளதுபோல் இங்கிலாந்தில் சட்ட கலாசாலைகளுக்குச் சென்று படிக்க வேண்டியதில்லை.

பாரிஸ்டர் பட்டம் பெறுவதற்கு ஒரு மாணவன் இரண்டு நிபந்தனைகள் பூர்த்தி செய்ய வேண்டும். அவை என்னவென்று சொல்லட்டுமா? தம்பி! (1) மாணாக்கர்களும் பாரிஸ்டர் — நீதிபதிகளுமாகச் சேர்ந்து உட்கார்ந்து பலமுறை விருந்து சாப்பிட்டாக வேண்டும். (2) குறிப்பிட்ட சில பரீட்சைகளில் தேறவேண்டும்.

விருந்து சாப்பிடுவது என்னத்திற்கு என்று நீ அறிய விரும்பலாம். முற்காலத்தில் சட்ட மாணாக்கர்களின் தொகை மிகக் குறைவாயிருந்தபோது பாரிஸ்டர்களும் நீதிபதிகளும் சட்ட மாணாக்கர்களும் கலந்து பழகுவதற்காகவும் சட்ட விஷயங்களைப் பற்றிச் சர்ச்சைகள் செய்வதற்காகவும் இந்த விருந்துகள் ஏற்படுத்தினார்களாம். இப்போது மாணாக்கர்களின் தொகை மிக அதிகம். பாரிஸ்டர்களும் நீதிபதிகளும் எங்கேயோ ஒரு மூலையில் உட்கார்ந்து தங்களுக்குள் பேசிக் கொள்வார்கள். மாணவர்களுடன் அவர்கள் பேசுவதற்கே வசதி இராது. எனவே, இந்த விருந்துகள் ஏற்படுத்திய நோக்கம் இப்போது நிறைவேறுவதே யில்லையாம். ஆனாலும் சம்பிரதாயத்தை மட்டும் விடாமல் அனுஷ்டித்து வருகிறார்களாம்.

தம்பி! இந்திய தேசத்திலேதான் நாம் பழைய சம்பிரதாயங்களை அதிகமாய்க் கட்டிக்கொண்டு அழுகிறோம் என்று சாதாரணமாய் நினைக்கிறோமல்லவா? ஆங்கிலேயர் நம்மைவிடப் பழைய சம்பிரதாயங்களில் அதிகப் பற்று உள்ளவர்கள். நம்மைவிட அதிகமாக ஆங்கிலேயர் குருட்டு நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் உள்ளவர்கள் என்றுகூடச் சொல்லலாம். இதைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள விரும்பினால், "கல்கி" பொங்கல் மலரில் நம் சட்டசபைத் தலைவர் கனம் சிவசண்முகம் பிள்ளை அவர்கள் எழுதியிருக்கும் கட்டுரையைப் படித்துப் பார்!

ஒரு காலத்தில் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் 200 அங்கத்தினர்தான் இருந்தார்களாம். ஆகையால் 200 ஆசனங்கள் மட்டும் பார்லிமெண்டில் போடப்பட்டிருந்ததாம். இப்போது 650 அங்கத்தினர்கள் இருந்தபோதிலும் பழைய சம்பிரதாயப்படி 200 ஆசனங்கள்தான் இருக்கின்றனவாம். முன்னால் வந்தவர்கள்தான் ஆசனத்தில் உட்காரலாம். மற்றவர்கள் பின்னால் நிற்க வேண்டியதுதான்! எப்படி யிருக்கிறது கதை! பாரிஸ்டர் ஆவதற்காக விருந்துகள் நடக்கும் விஷயமும் இப்படிப்பட்ட சம்பிரதாயந்தான்.

பாரிஸ்டர் விருந்துகள் மூன்று மாதத்துக்கு இருபத்துநாலு நடைபெறும். இவற்றில் குறைந்த பட்சம் ஆறு விருந்துகளுக்கு மாணவர்கள் கட்டாயம் போகவேண்டும். இம்மாதிரி மூன்று வருஷகாலம் விருந்துகளுக்குப் போய்த் தீரவேண்டும்.

விருந்து என்றால், இலவசச் சாப்பாடு அல்ல. இரண்டு அல்லது மூன்று ரூபாய் ஒவ்வொரு மாணாக்கனும் கொடுக்கவேண்டியிருக்கும். பணம் கொடுக்க வேண்டியது கட்டாயம். ஆனால் சாப்பிடுவது கட்டாயம் அல்ல; சும்மா உட்கார்ந்திருந்து விட்டுத் திரும்பலாம். பொதுவாக விருந்தில் நல்ல உணவு வகைகளும் மதுபான வகைகளும் கொடுக்கப்பட்டபடியால் மாணவர்கள் ஒரு கை பார்த்துவிடுவார்களாம்! மோகன் தாஸுக்கோ அவருடைய விரதம் இருந்தது. புலால் கலந்த உணவும் மதுபானமும் அவருக்கு உதவா. முதலிலெல்லாம் மோகன் தாஸ் சும்மா உட்கார்ந்து பார்த்திருந்துவிட்டுத் திரும்பினார். எனவே அவருடைய பங்கும் தங்களுக்குக் கிடைக்

கும் என்பதற்காக மற்ற மாணவர் கோஷ்டிகள் தங்களுடன் சேர்த்து உட்காரும்படி மோகன் தாஸை வற்புறுத்தி அழைக்கும்படி ஏற்பட்டது. விருந்துகளில் மோகன் தாஸுக்கு ஏகக் கிராக்கி!

கொஞ்ச காலத்துக்குப் பிறகு மோகன் தாஸுக்குத் தைரியம் பிறந்து, பாரிஸ்டர்-நீதிபதிகளுக்காகத் தனியாகக் கொடுக்கப் பட்டு வந்த பழங்களையும் கறிவகைகளையும் தமக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்டு ஏற்பாடு செய்து கொண்டாராம்.

'சாப்பாட்டு ராமன்' என்று நம் ஊரில் வேடிக்கையாகச் சொல்கிறோ மல்லவா? இதுபோலவே இங்கிலாந்தில் சாதாரணமாய்ச் 'சாப்பாட்டு பாரிஸ்டர்' என்று சொல்லுவதுண்டாம்.

விருந்து விஷயம் இப்படி யிருக்க; பரீட்சை சமாசாரம் என்னவென்று கேள். இரண்டே இரண்டு விஷயம் பற்றிய பரீட்சைகள் நடக்கும். ஒன்று ரோமன் சட்டம்; இன்னொன்று ஆங்கில நாட்டின் பழமைச் சட்டம். இவற்றில் தனித் தனிப் பகுதிகளுக்குப் பரீட்சைக்குப் போகலாம். பரீட்சைகளுக்குப் பாடபுத்தகங்கள் குறிப்பிட்டிருந்தார்கள். ஆனால் யாரும் சிரமப்பட்டுப் படிப்பதில்லை. இரண்டு அல்லது மூன்று மாதம் இலேசாகக் குறிப்புகளைப் படித்து விட்டுப் பரீட்சைகளில் தேறிவிடலாம். பரீட்சைக் கேள்விகள் மிகவும் சுலபமானவை. பரீட்சைப் பரிசோதகர்களோ தாராள மனம் உள்ளவர்கள். ஆகையால் பரீட்சைக்கு எழுதுகிறவர்களில் 100-க்கு 95 பேர் முதல் 99 பேர் வரையில் தேறி விடுவார்களாம்!

இப்படி இங்கிலாந்தில் பரீட்சைகளைச் சுலபமாய் வைத்திருந்தார்கள்; இதனாலே தான் படிப்பு முடிந்ததும் ஆங்கில இளைஞர்கள் பல அரிய பெரிய காரியங்களைச் சாதிப்பதற்கு முடிந்தது.

நம்முடைய நாட்டிலோ, பரீட்சைகளை எவ்வளவு கஷ்டமாகச் செய்யலாமோ அவ்வளவு கஷ்டமாகச் செய்து வைத்தார்கள்! இதனால் பரீட்சைகளில் தேறி ஒரு மாணாக்கன் வெளியே வருவதற்குள் அவனுடைய அறிவின் சக்தி யெல்லாம் செலவழிந்து போய் உடலும் அறிவும் சோர்ந்து விடுகின்றன. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகுகூட இன்னமும் அத்தகைய பரீட்சைகளையே நமது நாட்டில் கட்டிக்கொண்டு அழுகிறார்கள். ஆனால் இதையெல்லாம் உன்னிடம் சொல்லுவதில் பயன் என்ன? பரீட்சைகள் கஷ்டமா யிருக்க வேண்டும் என்று நீயா சொல்கிறாய்? போகட்டும்!

பாரிஸ்டர் பட்டத்துக் குரிய பரீட்சைகள் இவ்வளவு சுலபமாக இருந்தும் மோகன் தாஸ் அவற்றைக் கூடியவரையில் கஷ்டமாக்கிக்கொள்ள முயன்றார்! குறிப்பிட்ட பாட புத்தகங்களை யெல்லாம மிகவும் சிரமப்பட்டுப் படித்தார்! ரோமன் சட்டம், ஆங்கிலச் சட்டம் எல்லாம் படித்தார்.

இவ்வளவு படித்தும் நேரம் பாக்கியிருந்தது. வீண்பொழுது போக்க மனமின்றி லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்குப் போகத் தீர்மானித்தார். அந்தப் பரீட்சைக்குப் பழைய லத்தீன் பாஷையும், புதிய ஐரோப்பிய பாஷையொன்றும் கற்றுக்கொள்ள வேண்டி யிருந்தது! லத்தீன் பாஷை பாரிஸ்டர் வேலைக்கு மிகவும் பயன்படும் என்று மோகன் தாஸ் கேள்விப்பட்டார்; எனவே லத்தீன் படிக்கத் தொடங்கினார். ஆனால் முதல் தடவை பரீட்சைக்குப் போனதில் லத்தீன் பாஷையில் தேறவில்லை. இன்னும் அதிகப் பிடிவாதத்துடன் படிக்கத் தொடங்கினார். படிப்பதற்கு அனுசரணையாக வாழ்க்கை முறையை மேலும் எளியதாக்கிக் கொண்டார். எண்ணெய் அடுப்பு ஒன்று வாங்கித் தினம் காலையில் அவரே உணவு தயார் செய்துகொண்டார். காலை உணவு ஓட் தானியக் கூழும் கோக்கோவுந்தான். மாலையில் மீண்டும் அறையிலேயே ரொட்டியும் கோக்கோவும் தயாரித்துச் சாப்பிட்டார். மத்தியானத்தில் மட்டும் வெளியில் சைவ போஜன சாலை ஒன்றில் சாப்பிட்டார். இவ்விதம் வாழ்வு முறையை எளியதாக்கிக் கொண்ட காரணத்தினால், பணமும் மிச்சமாயிற்று; படிப்பதற்குச் சாவகாசமும் அதிகம் கிடைத்தது. தினமும் ஒரு ஷில்லிங் மூன்று பென்ஸ் செலவில் காலட்சேபம் நடந்தது. மாதம் ஐந்து பவுன் மிச்சமாயிற்று. கடைசியில், லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சையிலும் (லத்தீன் பாஷை உள்படத்) தேறிவிட்டார்!

தம்பி! லண்டனில் மேற்கண்டவாறு எளிய வாழ்க்கை நடத்தியது மோகன் தாஸுக்குக் கஷ்டமா யிருக்கவில்லையாம்; சந்தோஷமாகவே இருந்ததாம். இதைப் பற்றிக் காந்திஜி தம் சுய சரிதத்தில் எழுதி யிருப்பதைக் கேள்:—

"எளிய வாழ்வு முறையைக் கைக்கொண்டதால் என் வாழ்க்கை சந்தோஷமற்றதாயிற்று என்று யாரும் எண்ண வேண்டாம். அதற்கு மாறாக இந்த மாறுதல்

மூலம் என் அக நிலைமையும் புற நிலைமையும் ஒற்றுமைப் பட்டதைக் கண்டேன். ஆகவே புதிய வாழ்க்கை உண்மையோடு ஒட்டிய வாழ்க்கையாயிற்று. இந்த நான் உணர்ந்தபோது என் ஆத்மா ஆனந்த சாகரத்தில் மிதந்தது."

இவ்வாறு மோகன் தாஸ் லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சையிலும் பாரிஸ்டர் பரீட்சையிலும் தேறுவதற்குப் பிரயத்தனம் செய்துகொண்டு அதே சமயத்தில் தமக்குத் தாமே ஆத்ம பரீட்சைகளும் நடத்திக் கொண்டிருந்தார். அதற்றில் வெற்றி படைத்து வந்தார்.

மூன்று வருஷ காலம் லண்டனில் வசித்த பிறகு கடைசியில் 1891-ம் வருஷம் ஜூன் மீ 10ௗ மோகன்தாஸ் காந்தி பாரிஸ்டர் ஆனார். மறுநாள் 11ௗ இந்தியாவின் ஹைகோர்ட்டுகளில் வக்கீல் தொழில் நடத்தும் உரிமை பெற்றார். பிறகு ஒரு தினங்கூட இங்கிலாந்தில் அவர் தாமதிக்கவில்லை. ஜூன் மீ 12ௗ பம்பாய்க்கு பிரயாணமானார்.

## 10. கவலைக் கடல்

எஸ். எஸ். அஸ்ஸாம் என்னும் கப்பலில் மோகன்தாஸ் தாய்நாடு நோக்கிப் பிரயாணம் செய்தபோது அவருடைய மனம் கவலைக்கடலில் ஆழ்ந்திருந்தது. பாரிஸ்டர் பரீட்சையில் தேறிவிட்டாரே தவிர, வக்கீல் தொழில் நடத்தலாம் என்னும் நம்பிக்கை ஏற்படவில்லை. சட்ட கோட்பாடுகள் படித்திருந்தாரே தவிர, அவற்றை ஆதாரமாகக் கொண்டு கோர்ட்டுகளில் வாதாடலாம் என்னும் தைரியம் உண்டாகவில்லை.

மேலும், இந்தியச் சட்டங்களைப் பற்றி இங்கிலாந்தில் அவர் ஒன்றுமே கற்கவில்லையல்லவா? இந்தியச் சட்டங்கள் தெரியாமல் இந்தியக் கோர்ட்டுகளில் எப்படி வாதிடுவது என்று எண்ணி அதைரியப்பட்டார். கடல் நடுவில் ஆதரவு ஒன்றுமில்லாமல் விடப்பட்டவனுடைய உள்ளத்தைப் போல் அவருடைய உள்ளம் தவித்தது. பம்பாயில் அதற்கு முன்னுகேவே பிரசித்தி அடைந்திருந்த ஸர் பிரோஸிஷா மேத்தா என்னும் தேசபக்தப் பிரமுகர் சிங்கம் மன்றங்களில் சிம்மத்தைப்போல கர்ஜனை செய்வார் என்று மோகன்தாஸ் கேள்விப்பட்டிருந்தார். இங்கிலாந்தில் பாரிஸ்டர் பரீட்சைக்குப் படித்ததைக் கொண்டு இந்தியக் கோர்ட்டுகளில் ஸர் பிரோஸிஷா மேத்தா எவ்விதம் கர்ஜனை செய்திருக்க முடியும் என்பது மோகன்தாஸுக்கு ஒரே வியப்பாயிருந்தது. ஸர் பிரோஸிஷா மேத்தாவைப் போன்ற பிரபலமும் வருமானமும் அடையும் எண்ணம் லவலேசமும் மோகன்தாஸுக்கு இருக்கவில்லை. ஜீவனத்துக்கு வேண்டிய பணமாவது சம்பாதிக்க முடியுமா என்பதே அவருக்குச் சந்தேகமாயிருந்தது.

இந்த விஷயத்தைப் பற்றி இங்கிலாந்திலிருந்தபோதே மோகன்தாஸுக்குக் கவலை ஏற்பட்டிருந்ததாம். இந்திய மாணுக்கர்களிடம் அன்புகொண்டு புத்திமதி கூறிவந்த மிஸ்டர் பிரடரிக் பிங்கட் என்னும் ஆங்கிலேயரைப் பார்க்கும்படி ஒரு நண்பர் கூறினாராம். அவ்விதமே மோகன்தாஸ் சென்று பிங்கட் என்பவரைப் பார்த்தாராம். மோகன்தாஸின் கவலை இன்னதென்பதைப் பிங்கட் தெரிந்து கொண்டதும் பின் வருமாறு புத்திமதி சொன்னாராம்:—

"ஒவ்வொருவரும் பிரோஸிஷா மேத்தா ஆக முடியாது. வக்கீல் தொழில் செய்வதற்கு மேத்தாவைப்போல் மேதாவியாக இருக்க வேண்டிய அவசியமும் இல்லை. சாதாரண முயற்சித் திறமையும், நாணயமும் இருந்தால் போதும். உம்முடைய கஷ்டம் இன்னதென்று தெரிந்து கொண்டேன். உமக்குப் பொதுப் படிப்பு ரொம்பக் குறைவு. வக்கீல் தொழில் செய்வதற்கு உலக ஞானம் அவசியம். மனித சுபாவம் தெரிந்திருக்க வேண்டும். ஒருவனுடைய முகத்தைப் பார்த்தே அவனுடைய குணங்களை அறியும் திறமை வேண்டும். அதோடு சரித்திர அறிவு மிகவும் அவசியம். நீரோ இந்தியாவின் சரித்திரம் கூடப் படித்ததில்லை. ஊருக்குப் போனதும் இந்திய சரித்திர புத்தகங்களை வாசிப் படியுங்கள். மனித சுபாவத்தை அறிவதற்கு இன்னும் சில நூல்களை வாங்கிப் படியுங்கள். அதைரியப்பட வேண்டாம்!"

இம்மாதிரி பிங்கட் என்பவர் சொன்ன புத்திமதியை மோகன்தாஸ் மறக்கவேயில்லை. முக்கியமாக, வக்கீல் தொழிலில்

வெற்றி பெறுவதற்கு முயற்சியும், நாணயமும் இருந்தால் போதும் என்று கூறியது அவருடைய மனதில் ஆழப் பதிந்திருந்தது. எனவே, மனதில் கவலை அதிகமாகும்போதெல்லாம் பிஷப் கூறியதை ஞாபகப் படுத்திக் கொண்டு மோகன்தாஸ் தைரியம் பெற முயன்றார்.

பாரிஸ்டர் மோகன்தாஸ் இந்தியாவுக்குப் பிரயாணமானது ஜூன் மாதத்தில் என்று சொன்னேனல்லவா? ஜூன் ஜூலை மாதங்களில் அரபிக் கடலில் கொந்தளிப்பு அதிகமாயிருக்கும். ஏடென் துறைமுகத்திலிருந்து அலைகள் வர வரப் பொங்கிக் கப்பலைப் பாடாய்ப் படுத்தின. இது காரணமாகப் பிரயாணிகளில் பலர் நோய்வாய்ப் பட்டார்கள். ஒருவருமே அறையை விட்டு வெளிவருவதில்லை. ஆனால் மோகன்தாஸ் பூரண சௌக்யத்துடன் இருந்தார். கப்பலின் மேல் தட்டிலே நின்று பெரிய பெரிய அலைகள் வந்து கப்பலை மோதும் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அம்மாதிரி பெரும் அலைகள் அவருடைய உள்ளத்திலேயும் அடித்துக் கொண்டிருந்தன. கப்பல் இந்தியாவை நெருங்க நெருங்க உள்ளத்தின் அலைகளும் பெரிதாயின. பம்பாயிலிருந்து இங்கிலாந்துக்குப் புறப்படும் தறுவாயில் சாதிக் கட்டுப்பாடு என்னும் தொல்லை வந்து குறுக்கிட்டது அவர் நினைவில் இருந்தது. திரும்பித் தாய்நாட்டை அடைந்த பிறகும் அந்தத் தொல்லைக்கு ஆளாகும்படி நேருமோ என்னமோ? — இதுபோன்ற குருட்டு வழக்கங்களையெல்லாம் ஒழித்து இந்தியாவின் சமூக வாழ்க்கையில் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்று மோகன் தாஸின் இளம் உள்ளத்தில் பற்பல சிந்தனைகள் தோன்றிக் கொண்டிருந்தன.

ஆம்; தம்பி! மோகன் தாஸ் பின்னால் மகாத்மா காந்தி ஆவதற்கு அவசியமான அஸ்திவாரம் அப்போதே அவருடைய உள்ளத்தில் போடப்பட்டு வந்தது. இது போல் இன்னும் எத்தனையோ தடவை மோகன் தாஸ் கப்பல் பிரயாணம் செய்யும்படியாக நேரும். ஒவ்வொரு தடவையும் வெளியே கடல் அமைதியாயிருந்தாலும் அவர் உள்ளத்தில் சிந்தனை அலைகள் மோதிக் கொண்டிருக்கும். கப்பலிலிருந்து கரையிலே இறங்கியதும் மிகவும் கஷ்டமான நிலைமைகளை அவர் சமாளிக்கவேண்டியிருக்கும். மோகன் தாஸ் சிறிதேனும் அதைரியப்படாமல் நின்று சமாளிப்பார். இதையெல்லாம் இந்தச் சரித்திரத்தின் பின் பகுதிகளில் நீ பார்ப்பாய். (தொடரும்)

---

★ *காந்தி அஞ்சலி—10*

## முள்ளும் ரோஜாவும்

இந்தியாவின் சுதந்திரத்துக்கு முட்டுக்கட்டை போட்டவர்களில் ஒருவரான மாஜி இந்தியா மந்திரி சர் சாமுவேல் ஹோர் கூறியது:—

உலகம் மகான்களை அங்கீகரிக்கட்டும்; தனக்குத் தொண்டு செய்கிறவர்களிடம் மரியாதையும் நன்றியும் காட்டட்டும். 'இறந்து போனவர்களுக்கு ரோஜா மலர்கள் கொடுப்போம்; உயிரோடு இருப்பவர்களுக்கு முட்கள் கொடுப்போம்' என்று சொல்லுவது உண்டு.

மானிட ஜாதியில் ஆறில் ஒரு பங்குப்பேர் இந்தியாவில் வசிக்கிறார்கள். அவர்களுடைய அந்தஸ்தையும் சக்தியையும் மரியாதையையும் உயர்த்துவதற்குக் காந்திஜியைப்போல வேறு யாரும் உதவி செய்யவில்லை. இதற்காக, இந்தியா அவருக்கு நன்றி செலுத்த வேண்டும்; பிரிட்டனும் நன்றி செலுத்த வேண்டும்.

காந்திஜி எத்தனையோ தடவை காயம் உண்டாகும்படியாக முட்களால் குத்தப்பட்டார். இப்போது, நமது நன்றி என்னும் ரோஜா மலர்களை அவருக்குச் சமர்ப்பிப்போமாக!

கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? காசினியில்
மில்லெல்லாம் மீனாக்ஷி மில்லாமோ? — நல்லதெனச்
சொல்வருநூ லெல்லாம் துணியுங்கால் மீனாக்ஷி
மில்வருநூ லாமோ விளம்பு.

# ஸ்ரீ மீனாக்ஷி மில்ஸ் லிமிடெட்

## மதுரை

★

மூலதனம்:

அதிகாரம்பெற்றது .... ரூ. 50,00,000
செலுத்தப்பட்டது .... ரூ. 37,82,640

★

மொத்தம் கதிர்கள்: 36,884.

16 நெம்பர் முதல் 40 நெம்பர் வரை கைத்தறிகளுக்கும், இயந்திரத் தறிகளுக்கும், பனியன் பாக்டரிகளுக்கும் தேவையான நூல்கள் தயாரிக்கப்படுகின்றன.

★

நிருவாக கர்த்தர்கள்:

தியாகராஜ செட்டி அன் கோ.,
திருப்பரங்குன்றம் ரோடு :: மதுரை

தந்தி விலாசம்: கருமுத்து    டெலிபோன்: நெ. 1



# வளரும் தமிழ்

## ஆக்ஸ்போர்டு யுனிவர்ஸிடி பிரஸ்

இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு என்னுமிடத்தில் உலகப் பிரசித்தி பெற்ற சர்வகலாசாலை ஒன்று இருக்கிறது. அந்தச் சர்வகலாசாலையை யொட்டி ஒரு பிரசுராலயமும் இருக்கிறது. எத்தனை நகரங்களில் இந்தப் பிரசுராலயத்திற்குக் கிளைகள் இருக்கின்றன தெரியுமா? லண்டன், எடின்பரோ, கிளாஸ்கோ, நியூயார்க், டொரண்டோ, மெல்போர்ன், வெல்லிங்டன், கேப் டவுன், பம்பாய், கல்கத்தா, சென்னை ஆகிய இடங்களில் இருக்கின்றன! பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சூரியன் ஒருவேளை அஸ்தமித்தாலும், இந்தப் பிரசுராலயத்தின் ஏதாவது ஒரு கிளைமீது சூரிய வெளிச்சம் இருந்து கொண்டிருக்கும்!

பெரியவர்கள் படிப்பதற்குப் பெரிய பெரிய புத்தகங்களிலிருந்து சின்னஞ் சிறு குழந்தைகள் படிக்கச் சிறு சிறு புத்தகங்கள் வரையில் இந்தப் பிரசுராலயத்தார் வெளியிடுகிறார்கள். 1947-ம் வருஷம் டிசம்பரில் குழந்தைகளுக்காக வென்று எழுதப்பட்ட பண்டித ஜவாஹர்லாலின் சரித்திரத்தை வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகத்தின் ஆசிரியர் ஸ்ரீமதி சகுந்தலா மஸானி. 'தங்கம்' என்னும் குழந்தைக்குக் கதை சொல்வது போல எழுதியிருக்கிறது. அழகழகான வேடிக்கையான படங்களும் இருக்கின்றன. ஆங்கிலம் தெரிந்த குழந்தைகளுக்கு மிக மிக ரஸமாயிருக்கும்.

இதுபோன்ற நல்ல நூல்கள் தமிழில் வெளியானால், தமிழின் வளர்ச்சிக்குச் சிறந்த ஒரு சாதனமாகும். விலை ரூ. 3-8-0

## குழந்தைகளுக்குத் தமிழ்ப் பிரசுரங்கள்

தமிழிலும் சில காலமாகக் குழந்தைகளுக்கென்று பல பிரசுரங்கள் வெளியாகி வருகின்றன. பத்திரிகைகளும் வருகின்றன; புத்தகங்களும் வெளியாகின்றன.

"அணில்", "அம்புலி மாமா", "பாப்பா மலர்", பாலர் மலர்" என்னும் பத்திரிகை இதழ்களில் சிலவற்றைத் தமிழ்நாட்டுக் குழந்தைகள் பார்த்திருப்பார்கள்.

டமாரம் என்று ஒரு பத்திரிகை 'டம் டம்' என்று முழக்கிக்கொண்டு புதுக்கோட்டையிலிருந்து புறப்பட்டிருக்கிறது. 'பங்கஜு வீட்டில் பங்குனி மாதப் பண்டிகைக்கு வந்த பலருள் பட்டணத்துப் பஞ்சமாமா ......' என்று இப்படிப் 'ப'வில் ஒரு கதையும் இன்னும் பற்பல விஷயங்களும் பாடல்களும் பலே பலே என்று பாடும்படி இப்பத்திரிகையில் வெளியாகி யிருக்கின்றன. தனிப் பிரதி விலை 0—0—6.

பாலர் பாடல் என்று ஒரு புத்தகம் புதுக்கோட்டைத் தமிழ் நிலையத்தார் வெளியிட்டிருக்கிறார்கள். இதன் ஆசிரியர் அழ. வள்ளியப்பா குழந்தைகளை அழாமல் செய்வதிலும் சிரிக்கப் பண்ணுவதிலும் நிபுணர் என்று தெரிகிறது. 'அழுத பிள்ளை வாய் மூட அம்மாவுக்கு உதவும் மிட்டாய்' அபூர்வ ருசியுடன் இருக்கிறது. விலை அணா ஐந்து.

அதே ஆசிரியரின் இன்னொரு பாடல் தொகுதி "குழந்தைக் குரல்" என்னும் பெயருடன் மேலட்டையில் தேசியக் கொடியைத் தாங்கிக் கொண்டு 'பப்பள பள பள' என்று பற்பல வர்ணங்கள் ஜொலிக்க வெளியாகி யிருக்கிறது.

"வட்டமான தட்டு
தட்டு நிறைய லட்டு
லட்டு மொத்தம் எட்டு"

என்று படிக்கும்போது எந்தக் குழந்தைக்குத்தான் நாவில் ஜலம் ஊறாது? ஆகவே,

"கிட்டு நான்கு லட்டு
பட்டு நான்கு லட்டு
மொத்தம் தீர்ந்த தெட்டு
மீதம் காலித் தட்டு!"

என்று ஆவதில் வியப்பில்லை தானே?

"குழந்தைக் குரல்" விலை ரூபாய் ஒன்று. விலாசம்: ராமவிலாஸ், ராயவரம், புதுக்கோட்டை ஸ்டேட்.

## புதிய தமிழ்ப் பத்திரிகைகள்

நூறு, ஆயிரம், பதினாயிரம் என்ற கணக்கில் தமிழ் நாட்டில் சினிமாப் பத்திரிகைகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன. அவை வெளிவந்த செய்தியை நாம் தெரிந்து கொள்வதற்குள்ளே அவற்றில் சில மறைந்து போய் விடுகின்றன.

அவ்விதமின்றி, நின்று நிலைத்து நடக்கக் கூடிய அம்சங்கள் உள்ள சினிமாப் பத்திரிகைகளில் 'குண்டூசி' ஒன்று. "குண்டூசி" ஆசிரியர் ஸ்ரீ பி. ஆர். எஸ். கோபால் சினிமா விமரிசனத் துறையில் நீண்டகால அநுபவம் வாய்ந்தவர். சினிமாக் கலை, சினிமாத் தொழில், சினிமாத் தொழிலாளிகள், சினிமா நட்சத்திரங்கள், சினிமா தூமகேதுக்கள் ஆகிய விஷயங்களைப் பற்றி யார் என்ன கேள்வி கேட்டாலும் பளிச் பளிச் சென்று பதில் சொல்லக் கூடியவர். தமிழ் நாட்டு சினிமாத் தொழில் சம்பந்தமான ஒரு நடமாடும் 'என்ஸைக்ளோபீடியா' என்று "குண்டூசி" ஆசிரியரைச் சொல்வது மிகையாகாது. "குண்டூசி" அட்டைப் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரையில் பற்பல மூவர்ணப் படங்களோடும், இரு வர்ணப் படங்களோடும், தனி வர்ணப் படங்களோடும் ஒரு 'டெக்னிகலர்' பத்திரிகையாக வெளிவந்து கொண்டிருக்கிறது. இது வரை நான்கு இதழ்கள் வந்து விட்டன. விலாசம்: "குண்டூசி", 264, தம்பு செட்டித் தெரு, சென்னை. வருஷ சந்தா: ரூ. 6—0—0; தனிப் பிரதி அணா எட்டு.

"நவினம்" என்னும் மாத சஞ்சிகையின் மூன்றாவது மலரின் முதல் இதழானது 1948-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் வெளி வந்திருக்கிறது. இதில் "உதயசங்கரன்" அல்லது "அமராவதி இளவரசன்" என்னும் நவீனத்தின் முதல் எட்டுப் பகுதிகளோடு இன்னும் பல விஷயங்களும் பாடல்களும் அடங்கியிருக்கின்றன. அட்டையில் ஒரு பெண்மணி தன்னைத்தானே குத்திக் கொள்ளப் போகும்போது, ஒரு வாலிபன் அவள் கையைப் பிடித்துத் தடுக்கும் காட்சி சித்திரிக்கப்பட்டிருக்கிறது. படத்தைப் பார்த்ததுமே, "ஏன் இந்தப் பெண் குத்திக் கொள்ளப் பார்க்கிறாள்?" "ஏன் அந்த வாலிபன் அதைத் தடுக்கிறான்?" என்ற சிந்தனைகள் தூண்டப்படுகின்றன. தனிப்பிரதி அணா நான்கு. ஆண்டு சந்தா ரூ. 3—0—0. விலாசம்: ஆசிரியர் வி. எஸ். டி. சாமி, வேப்பேரி, சென்னை.

இந்தியா தேசத்துக்கு இப்போது எல்லா வற்றிலும் முக்கியமாக வேண்டியது, தொழில் முன்னேற்றமாகும். எனவே, தொழில் வளர்ச்சி பற்றிய பத்திரிகைகள் தோன்றுவதும் அவசியம். "பதனிடும் தொழில்" என்னும் மாதப் பத்திரிகையின் முதல் இதழைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். தென்னிந்தியத் தோல் பதனிடுவோர்கள் — வியாபாரிகள், சங்கத்தின் சார்பாக வெளியாகும் இப்பத்திரிகையின் தனிப் பிரதி விலை அணா 8; வருட சந்தா ரூ. 6-0-0; விலாசம்: மானேஜர், "பதனிடும் தொழில்", வாணியம்பேட்டை.

"நாலரைக் கோடி முஸ்லிம்களைக் கைவிட்டு ஜின்னா கோஷ்டியார் பாகிஸ்தானை வாங்கிக் கொண்டனர். ஆசை காட்டி, பயம் வெறுப்புப் புகட்டி, இஸ்லாமின் பெயரால் பாமர முஸ்லிம்களைத் தூண்டி, இஸ்லாமிய ஒழுக்கத்தைக் கேவலப்படுத்தி, உண்மை முஸ்லிம்களாகிய உலமாக்களை அசௌகர்யத்துக் காரியத்தைச் சாதித்துக் கொண்ட லீக் லீடர்கள் ஒவ்வொருவராய் பாகிஸ்தானுக்குக் கம்பி நீட்டினார்கள்...... இன்று பாகிஸ்தானில் இருந்து கொண்டு நம்மை கிளைக்க மூட்டுகின்றனர். நம்மைத் தொலைக்க அவர்கள் அனுதாபம் ஒன்றே போதுமானது."

இம்மாதிரி, "ஆஸாத்" என்னும் புதிய வாரப் பத்திரிகை எழுதியிருக்கிறது. தமிழ் நாட்டு முஸ்லிம் சகோதரர்களுக்குச் சரியான வழிகாட்ட நல்ல சமயத்தில் தோன்றியிருக்கிறது. ஆசிரியர்: மௌலானா அப்துல் அஜீம்; விலாசம்: கடலங்குடி தெற்குத் தெரு, கும்பகோணம்; வருஷ சந்தா: ரூ. 6—0—0; தனிப்பிரதி அணா இரண்டு.

---



"மாடிப் படியை அடிக்கடி உபயோகிக்க வேண்டாம்" என்று வீட்டுக்காரர் கட்டளையிட்டதினால் ஏற்பட்ட விபரீத பலன்!

# உபமானம்

சசிதேவி

ஒன்றைப் போன்றுள்ள வேறு ஒரு பொருளையோ, மனிதர்களையோ குறிப்பால் உணர்த்துவதற்கு உபமானம் என்று சொல்லுகிறோம்.

உபமான — உபமேயங்கள் இல்லாத காரியங்களே கிடையாது. உபமானங்களைக் கையாண்டே செய்யுள் இயற்றுகிறார்கள், கவி பாடுகிறார்கள், ஸ்தோத்திரம் செய்கிறார்கள்; உலகத்தில் எல்லாமே உபமானங்களால் நடக்கிறது.

ஆசிரியர் ஒருவர் சொன்னார், "நமக்குப் பிடித்த விஷயமானால் 'அமிர்தமாக' இருப்பதாகச் சொல்லுகிறோம். பிடிக்கவில்லையானால் அது 'விஷமாக' இருப்பதாகச் சொல்லுகிறோம்" என்று.

இது முற்றும் உண்மை. அமிர்தத்தை நாம் அருந்தியதில்லை. விஷத்தையும் நாம் சாப்பிட்டதில்லை. (சாப்பிட்டிருந்தால் இப்பொழுது இதை எழுத முடியுமா?) ஆனால் நாம் சொல்லுவதென்னவோ, எதையும் அதிகப்படுத்தித்தான் சொல்லுகிறோம். பிடித்துவிட்டால் எதுவும் அதிக உயர்வாகவும், இல்லாவிடில் அதிகத் தாழ்வாகவும் தோன்றுவதே மனித இயல்பாக இருக்கிறது.

நம் வீட்டுக் கிணற்றுத் தண்ணீரை 'அமிர்தம்' என்று புகழுகிறோம். ஏன்? நமக்குப் பிரியமாக இருப்பதால்தான். அதைப் போல், சிலர் வீட்டுக் காப்பி நமக்கு 'விஷமாக' இருப்பதும் பிடிக்காத காரணம்தான். இந்த உபமானங்களில் முற்றிலும் உண்மை இல்லாமற் போனாலும் கூட, உபமானங்களின்றி நாம் பேச முடிவதில்லை — முடிந்தாலும் கூட ரஸிப்பதில்லை.



தெய்வங்களைத் துதிக்கும் பொழுது, 'தாமரைக் கண்ணா', 'அம்புஜ பாதா', 'கார்முகில் வண்ணா' என்று உபமானங்களுடனேயே துதி செய்கிறோம்.

'மீனாட்சி', 'பத்மாட்சி' என்னும் நம்முடைய பெயர்களிலெல்லாம் அழகான உபமானங்கள் மறைந்து கிடக்கின்றன.

ஸாமுத்ரிகா லட்சணத்தை ஒருவன் வர்ணிக்கப் புகுந்தாலோ முழுவதும் உபமானங்களாகத்தான் இருக்கும். கூந்தலை மேகமாகவும், கண்களை நீலோத்பலங்களாகவும், பற்களை முத்தாகவும், கழுத்தைச் சங்காகவும் சொல்வார்கள். ஒரே உபமான மயம்!

குணத்தை வர்ணிக்கும் பொழுதும் கூட, 'பூமாதேவியைப் போலப் பொறுமை' 'சிங்கத்தைப் போன்ற தைரியம்' 'நாயைப் போன்ற நன்றி', 'நரியைப் போன்ற தந்திரம்' என்றெல்லாம் சொல்லுகிறோம்.

இவை ஒருபுறம் நிற்க, நம்முடைய தினசரி வாழ்க்கையில் நாம் பேசும் பேச்சுகள் அனைத்தையும் பார்த்தால் அவற்றில் முக்கால் பாகம் உபமானங்களாக இருப்பதைக் காணலாம்.

'அடுத்தாத்துக் குழந்தை ராஜாவாட்டமா மூக்கும் முழியுமாய் இருப்பதாக' வர்ணிக்கிறோம். ராஜாக்களுடைய மூக்கும் முழியும் ரொம்பத் தீர்க்கமாக இருப்பதாகத்தான் நமக்கு எண்ணம்! "கமலாவைப் பாரு! அவாத்து வாசல்லே பட்டாட்டமாப் பெருக்கி, மணிமணியாக் கோலம் போட்டிருக்கா! நீயும் இருக்கியே தடியாட்டமா! அசத்து!" என்று நம் குழந்தைகளை நாம் வையும்போது, நம் வாயில் வரும் உபமானங்களைக் கணக்கிடவா செய்கிறோம்?

காப்பிக் கொட்டையைக் காந்த விடாமல் 'பொன்னாட்டா' வறுக்கும்படி சமையற்காரர்களுக்குக் கட்டளை இடுகிறோம்.



நான் குழந்தையாக இருந்த பொழுது 'கல்லாட்டமா' இருந்த நான்கு பவுன் சங்கிலியைக் கெட்டுப்போகவிட்

டதை என் பாட்டி இன்னும் கூடச் சொல்லிக் காட்டுகிருள். காப்பிக் கொட்டைக்குப் பொன் உபமான மென்ருல், பொற் சங்கிலிக்குக் கல் உபமானமாக வந்து நிற்கிறது!



இத்துடன் விடுகிறோமா? அதுதான் கிடையாது! கற் சட்டிகள் 'வெண்கலமாட்டமா' இருக்க வேண்டும் என்கிறோம். வெண்கலக் கூஜாவையோ 'வெள்ளி மாதிரி தேய்த்து வைக்க' விரும்புகிறோம்.

யாரைப் பற்றியாவது இகழ்ச்சியாகச் சொல்லும் பொழுது, இந்த உபமானங்கள் நம்முடைய உணர்ச்சியைத் தாராளமாக வெளியிடுவதற்கு எவ்வளவோ உதவி செய்கின்றன.

'எதிராத்துப் பெண் 'குதிராட்டம்' வளர்ந்து இன்னும் கலியாணமாகாமல் நிற்பது, நமக்குத்தான் தலை பாரமாக இருக்கிறது. குடி இருக்கும் வீட்டுக்காரர்களின் குழந்தைகள் 'குரங்கைப் போல் விஷமம் செய்வது சகிக்க முடியவில்லை என்கிறோம்.

இன்னும், உருவமற்றவையும் நாம் கண்ணுலே முன்பின் பார்த்தறியாததும் கூட சில வேளைகளில் உபமானமாக வந்துவிடுவதும் உண்டு. 'பிசாசு' மாதிரி தலையை விரித்துக் கொண்டிருக்கும் பெண்ணும், 'சனியனைப் போன்று படுத்துகிற வேலைக்காரர்களும், 'பழியாட்டமா வந்து நிற்கும் கடன்காரர்களும் நம்முடைய தினசரி வாழ்க்கைக்குப் புதிதல்ல. நம்மையும் அறியாமல் வாயில் வந்து விடும் இந்த உபமானங்களை நம்மால் விட முடியுமா?

சுருக்கமாக முடித்து விட வேண்டுமென்று நினைத்து எழுத ஆரம்பித்த இந்தக் கட்டுரை, 'அனுமார் வாலைப் போல்'.........அடசட்! இதற்குக் கூட உபமானம் வந்து விடுகிறதே!

---

காந்தி மகான் திருவாக்கு — 6

## எம்மதமும் சம்மதமே

( 10—2—1934 "ஹரிஜன்" இதழில் காந்திஜி எழுதியது )

ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவ, சீக்கிய, ஜைன, புத்த மதங்களினுடைய அடிப்படை உண்மையில் எனக்கு நம்பிக்கை உண்டு.

எல்லா மதங்களும் ஆண்டவனால் உலகத்துக்கு வழங்கப்பட்டவை என்றும், எந்த மக்களுக்காக அந்த மதங்கள் வழங்கப்பட்டனவோ அந்த மக்களுக்கு அவைகள் இன்றியமையாதன வென்றும் நான் உறுதியாக நம்புகிறேன்.

பல்வேறு மத கிரந்தங்களை, அந்தந்த மத பக்தர்களைப் போலவே விருப்பு வெறுப்பில்லாமல் நாம் வாசித்துப் பார்த்தால், எல்லா மதங்களும் அடிப் படையில் ஒன்று என்பதைக் காண்போம்.

• • •

ஹிந்துக்கள் யாரைப் போற்றிப் புகழ்கிறார்களோ அந்த ஈசுவரனும், முஸ்லிம்கள் யாரைத் துதித்து வணங்குகிறார்களோ அந்த அல்லாவும், கிறிஸ்தவர்கள் போற்றும் ஆண்டவனும் ஒன்றேயாகும். ஹிந்துமதத்தில் கடவுளுக்குக் கணக்கற்ற பெயர்கள் இருப்பதுபோல, மற்ற மதங்களிலும் கடவுளுக்குப் பல பெயர்கள் இருக்கின்றன. அந்தப் பெயர்கள், யாரையும் தனிப்படக் குறிப்பிடுவன அல்ல. அவைகள் வெறும் அடைமொழிகள். கடவுள் எல்லையற்றவராகவும் வர்ணனைக்கு அடங்காதவராகவும் அடைமொழிக்குப் புறம்பானவராகவும் இருந்த போதிலும், சர்வ சக்தி வாய்ந்த அந்தப் பரம்பொருளைச் சின்னஞ் சிறிய மனிதன் ஏதோ தனக்குத் தெரிந்த முறையில் வர்ணிக்க முயன்று பார்த்திருக்கிறான்.

குறிப்பு:—எதிர்ப் பக்கத்திலே தொடங்கி, கல்கத்தாவில் காந்திஜி அஸ்திக் கரைப்பு நிகழ்ச்சிப் படங்கள் வெளியாகியிருக்கின்றன. அவற்றில், காந்திஜியின் சர்வ சமய சம்மதக் கொள்கைக்கு இயைந்தவாறு எல்லா மதங்களின் சார்பாகவும் பிரார்த்தனை நடந்திருப்பதைப் பார்க்கலாம்.



மேற்கு வங்காள கவர்னர் ராஜாஜி கல்கத்தாவுக்குக் கொண்டு வந்த காந்தி மகானின் அஸ்தி கங்கையின் கிளை நதியான ஹூக்ளியில் 12உ கரைக்கப்பட்டது. கரைப்பதற்கு முன்னால் இந்தியாவில் வாழும் எல்லா மதங்களின் சார்பாகவும் பிரார்த்தனைகள் நடந்தன. மேலே ஹிந்துக்களும் கீழே முஸ்லிம் உலமாவும் பிரார்த்தனை செய்கிறார்கள்.



கல்கத்தாவி லிருந்து பதினைந்து மைல் தூரமுள்ள கூட்டமா யிருந்
தாலும் பத்து லட்சம் மக்கள் வந்திருந்தார்கள். அப்பெருங் கூட்டத்
தில் புத்த பிக்ஷுக்களும் சீக்கிய குருவும் பிரார்த்தனை செய்தார்கள்.

பின்னர், பார்ஸி மதத்தைச் சேர்ந்த ஆச்சார்ய புருஷர்கள் பார்ஸி வேதத்தி லிருந்து தோத்திரம் படித்தார்கள்.

இதோ, கிறிஸ்துவப் பாதிரியார் காந்தி மகான் பெரிதும் பக்தி கொண் டிருந்த ஏசுநாதரின் திவ்ய மொழிகளைப் படித்துச் சொல்கிறார்.

உலகமெங்கும் பெருங் கஷ்டத்துக்கு உள்ளாயிருக்கும் யூதமத ஆச்சாரியாருக்கும் இங்கே இடம் அளிக்கப்பட்டது. சர்வ சமயங்களின் சார்பாகவும் பிரார்த்தனைகள் பூர்த்தியான பிறகு ராஜாஜி ஒலிபெருக்கியின் முன் நின்று, ''காந்திஜிக்காக யாரும் வருந்த வேண்டாம்!'' என்று வங்க மக்களுக்கு ஆறுதல் கூறினார். பின்னர்,.........





• •

......புதுடில்லியிலிருந்து கொண்டு வந்திருந்த மகாத்மாவின் அஸ்தி கலசத்தை ஏந்திக் கொண்டு படகில் ஏறினார். நதியின் நடுவில் அஸ்தியைக் கொட்டிக் கரைந்து விட்டுக் கரையை அடைந்து அநாதைக் குழந்தையைப் போல் உட்கார்ந்து விம்மி அழுதார்.

• •

# ஆசையால் வந்த ஆபத்து!

வி.எஸ். மணி



ஒரு காட்டில் ஒரு சிறிய செடி ஒன்று இருந்தது. அந்தச் செடிக்கு இலைகளே இல்லை, வெறும் முட்கள் தான் இருந்தன. அதற்காக அந்தச் செடி அடைந்த வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. தனக்கு இலைகளில்லாத குறை அந்தச் செடிக்கு ஒரு பெருங் குறையாகவே இருந்தது. அதனால் அது எப்பொழுது பார்த்தாலும் வாட்டத்துடன் இருக்கும்.

ஒருநாள், "நமக்குப் பளபளப்பான தங்க இலைகளிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!" என்று அந்த முட்செடி நினைத்தது. என்ன ஆச்சரியம்! உடனே அந்தக் காட்டிலிருந்து ஒரு வனதேவதை அதற்கு முன்னால் தோன்றி, "உன்னுடைய முட்களெல்லாம் மறைந்து அதற்குப் பதிலாகப் பளபளப்பான தங்க இலைகள் உண்டாகட்டும்" என்று வரம் கொடுத்தது. அவ்வளவுதான்; முட்செடி தங்கச் செடியாக மாறிவிட்டது.

ஆகா! என்ன பளபளப்பு! வெய்யில் வேளையில் அந்தச் செடியிலிருந்து உண்டாகும் பிரகாசம் கண்ணைப் பறித்தது.

முட்செடிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. மற்ற செடிகளுக்கெல்லாம் இல்லாமல் தனக்கு மாத்திரம் தங்க இலைகளிருந்தால் அதற்குச் சந்தோஷமாயிருக்காதா, என்ன?

ஆனால் மறுநாளே அதற்கு வந்தது ஆபத்து! காட்டு வழியே வந்த ஒரு திருடன் அந்த அற்புதச் செடியையும் அதன் பளபளப்பான தங்க இலைகளையும் பார்த்து ஆச்சரியத்தினால் அப்படியே நின்றுகொண்டிருக்கவில்லை; அந்தச் செடியிலிருந்த தங்க இலைகளையெல்லாம் ஒன்று விடாமல் பறித்துக்கொண்டு போய் விட்டான்! முட்செடி பழையபடி மொட்டையாகி விட்டது. அதற்கு வருத்தம் தாங்கவில்லை.

"தங்க இலைகளாயிருந்ததினால் தானே நமக்கு இந்த ஆபத்து வந்தது! கண்ணாடி இலைகளாயிருந்தால் இந்த ஆபத்து வந்திராதல்லவா?" என்று அந்த முட்செடி நினைத்தது. உடனே வனதேவதை தோன்றி அது நினைத்தபடி அதற்குக் கண்ணாடி இலைகளைக் கொடுத்துவிட்டுச் சென்றது.

என்ன கஷ்டகாலம்! அதற்கு அடுத்த நாள் காற்று சற்றுப் பலமாக அடித்தது. அதனால் இலைகளெல்லாம் கீழே உதிர்ந்து நொறுங்கிவிட்டன. மறுபடியும் முட்செடி இலைகளில்லாமல் தவித்தது.



"திருடனோ நம்முடைய தங்க இலைகளைப் பறித்துக்கொண்டு சென்றுவிட்டான். காற்றோடு கண்ணாடி இலைகளெல்லாம் நொறுங்கி விட்டன. இதெல்லாம் நமக்கு வேண்டவே வேண்டாம். மற்ற மரங்கள் மாதிரி நமக்கும் பசுமையான இலைகள்

"இருந்தால் அதுவே போதும்!" என்று அது எண்ணிற்று. தேவதையின் அருளினால் அந்தச் செடியில் உடனே இலைகள் தோன்றின. முட்செடி தலைதூக்கி நின்றது.

அப்போது அந்த வழியாக வந்த ஆட்டுக் குட்டியொன்றுக்குப் பசுமையான இலைகளைக் கண்டதும் நாக்கில் ஜலம் ஊறிற்று. ஆகவே, அது அந்தச் செடியிலிருந்த இலைகளையெல்லாம் ஒன்று விடாமல் தின்று விட்டுப் போய்விட்டது!

பாவம், முட்செடி என்ன செய்யும்? அதற்கு அழுகையும் ஆத்திரமும் பொங்கிக் கொண்டு வந்தது. "மற்ற மரங்களைப் போல் நமக்கும் இலைகளில்லையே என்று நினைத்து வருந்தியதற்குத் தங்க இலைகள் கிடைத்தன. அவை திருட்டுப் போகவே கண்ணாடி இலைகள் கிடைத்தன. கண்ணாடி இலைகளும் காற்று அடித்து நொறுங்கிவிட்டன. பிறகு பசுமையான இலைகள் உண்டாயின. அந்த இலைகளாவது நிலைத்து நிற்கும் என்று பார்த்தால் அவற்றையும் அந்தப் பாழும் ஆடு வந்து தின்று விட்டது. நமக்கு எந்த இலைகள் இருந்தாலும் இப்படி ஆபத்தாகத்தான் வந்து முடியுமோ? சரி சரி, நாம் பழையபடி முட்செடியாக இருந்தாலே போதும்!" என்று நினைத்து அது கண்ணீர் விட்டது.

அடுத்த நிமிஷம் அதற்கு முன்னால் தோன்றிய வனதேவதை, பழையபடி அதை முட்செடியாக மாற்றிவிட்டு மறைந்தது.

"இந்த முட்கள்தான் நம் உயிரை இத்தனை நாளும் காப்பாற்றி வந்தன. இது தெரியாமல் நாம் என்னவெல்லாமோ எண்ணி வீணாக வருந்தினோமே!" என்று நினைத்து முட்செடி தனக்குள் சிரித்துக் கொண்டது.

அதற்கு இப்போது எவ்வித ஆசையும் இல்லை; ஆபத்தும் இல்லை!



# நினைவில் தேய்ந்த கனவு

வை. சுப்பிரமணியன்

ஆபீஸுக்குப் போவதற்கு எப்போதுமே அவசரம்தான் எனக்கு. இந்த டிராம் வண்டியில் பதினொரு மணிக்கெல்லாம் பாரீஸ் கார்னருக்குப் போக வேண்டுமென்றால், காலை எட்டு மணிக்கே அதைப் பிடித்தாக வேண்டும்.

மயிலாப்பூர் லஸ் மூலையில் மெதுவாகத் திரும்பிச் செல்லும்போது டிராம் வண்டி இழைக்கும் விநோத சத்தம் மனதை விட்டு அகலாத ஒரு விசித்திரமான விஷயம். இந்த அபூர்வ சத்தம் கேட்டவுடனே, கடையிப் பிடிகளை அவசர அவசரமாக அள்ளிப் போட்டுக் கொண்டு கிளம்பிச் சென்று அந்த டிராமைப் பிடித்து விடுவேன்.

தினசரி வாழ்க்கையில் இந்த டிராம் வண்டியில் பிரயாணம் செய்து ஆபீசுக்குச் செல்வது என்னுடன் ஒன்றிப் போய் விட்ட ஒரு விஷயம். பழகியும், பார்த்துப் பேசியுமிருக்கிறவர்களைத் தினம் தினம் காண்கிறேன்; ஆமைபோல் நகர்ந்து செல்லும் டிராம் வண்டி மறுதினம் பாரீஸ் கார்னர் போய்ச் சேர்வதுபோல உணர்கிறேன்; இடையில் நன்றாகத் தூங்கி விடுவதும், விழித்துக் கொள்ளும்போது மற்றும் பலர் தூங்கி விழுவதை வேடிக்கை பார்ப்பதும், இப்படியாக ஒருநாள் நடப்பதைப் போன்ற காரியங்களே ஒவ்வொரு நாளும் நடந்து வந்தன.

அன்றைக்கு மட்டும் என் வாழ்க்கையில் சில புது விஷயங்கள் தலைகாட்ட ஆரம்பித்தன. புது விஷயங்களை யொட்டிய புது அனுபவங்களும் கூட ஏற்படத்தானே செய்யும்?

முதலாவதாக, அன்று ஆபீஸுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது எனக்கு ஒரு கடிதம் வந்தது. கடிதம் வருவது வாழ்க்கையில் புது அனுபவம் இல்லை தான்; ஆனால், கடிதத்தில் அடங்கிய விஷயங்களுக்கும் வாழ்க்கைக்கும் நிச்சயம் சம்பந்தம் உண்டல்லவா?

நான் பிரம்மசாரி; என்னைக் கிரஹஸ்தனாக்க விரும்பினார்கள் போலும் என் பெற்றோர். கடிதத்தில் அவர்கள் குறிப்பிட்டிருந்த விஷயம் இதைப் பற்றியதுதான். முதல் முதலாக என்னுடைய கல்யாணத்தைப் பற்றி நான் அப்போதுதான் நினைத்தேன் என்பதில்லை. இருந்தாலும் இந்தக் கடிதத்தைப் படித்த பிறகுதான் கல்யாணம் என்கிற விஷயத்தைப்பற்றி மனதில் நீண்ட ஆராய்ச்சிகள் நடத்தத் தோன்றியது.

★

டிராம் வண்டி வழக்கம் போலவே விநோத சத்தத்துடன் லஸ் மூலையில் திரும்பியது. கையில் பிரித்த கவருடன் வண்டியின் மத்தியில் நான் அமர்ந்தேன். மனதில் சிந்தனை எழுந்தது. கடிதத்துக்கு இன்று பதில் எழுதியாக வேண்டும். 'கல்யாணம் வேண்டாம்; பிறகு பார்த்துக் கொள்வோம்' என்று எழுதி விடுவோமா?

அன்று வண்டியில் எனக்கு மட்டும்தான் தூக்கம் வரவில்லையே தவிர, பெரும்பாலோர் தூங்கி ஆடி விழுந்து கொண்டிருந்தனர். காலை ஒன்பதரை மணிகூட ஆகவில்லை; இருந்தும் இப்படிப்பட்ட தூக்கம் தலை விரித்தாடியது டிராம் வண்டிக்குள். அதுதான் டிராம் வண்டிப் பிரயாணத்தில் சகஜமாய்ப் போய்விட்ட விஷயமாயிற்றே!

என் எண்ணம் அந்தக் கடிதத்தைப் பற்றியும் நான் எழுதப்போகும் பதிலைப் பற்றியதாகவுமே இருந்தது. நமக்குக் கல்

யாணம் வேண்டாம் என்று நாம் எழுதப் போவதற்கு அர்த்தம் என்ன இருக்கிறது? வாழ்க்கையில் அவ்வப்போது நடக்க வேண்டிய சம்பவங்களை ஒதுக்கிவிட முயல்வது சரியான விஷயம் அல்லவே!

இப்படியும் ஒரு வேதாந்தம் முளைத்தது மனதில். கண்களை மூடிக்கொண்டே என்னுடைய பிரச்னையைப் பற்றிய நினைவில் கிடந்தேன்.

டிராம் வண்டி ஒரு தடவை பெருமூச்சு விட்டு நின்றது. சங்கீதத்துக்கு முக்கியமான சுருதி போன்றது தூக்கத்திற்குத் தாலாட்டுப் போன்ற அந்தக் கடகட வென்ற சத்தம்! டிராம் நின்றபின், அதாவது அந்தச் சத்தமும் நின்றபின், திடீரென்று சிலர் கண் விழித்துக் கொள்வார்களல்லவா? அவர்களில் நானும் ஒருவன். அந்த வழக்கத்தை யொட்டி அன்று நான் கண் விழித்துக் கொண்டபோது, வண்டிக்குள் ஒரு யுவதி ஏறி என் முன் காலியாகக் கிடந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

அவளைப் பார்த்தவுடன் எனக்கு மீண்டும் கடிதத்தின் நினைவு வந்தது. அப்பா எழுதியிருந்த கடிதத்துடன் அம்மாவும் ஒரு துண்டுக் கடிதம் எழுதி வைத்திருந்தாள்.

“ஹோட்டலில் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே. கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு விடு!...... பெண் ரொம்ப நன்றாயிருக்கிறது. மூக்கும் விழியுமாய்......”

சாதாரணமாக நன்றாயில்லாத பெண்களை எந்தப் புருஷனும் விரும்பமாட்டான். அது போலவே நன்றாயிருக்கிற புருஷனையும்தான் எந்தப் பெண்ணும் விரும்புவாள். அம்மா சொல்வதற்காகவும் அந்தப் பெண் நன்றாயிருப்பதற்காகவும் நான் செய்து கொண்டுவிட வேண்டும் என்பது என்ன அவசியம்? கடிதத்தில் இருந்த வரிகளை நினைவு படுத்திக் கொண்டு எதிரிலிருந்த பெண்ணை நோக்கினேன். தினசரி டிராமில் செல்லும்போது நூற்றுக் கணக்கான யுவதிகள் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் முகங்களை ஏறிட்டு நோக்கியதில்லை நான். அதற்கெல்லாம் அவசியமுமில்லை. இப்போது என் கையிலிருந்த கடிதத்தில் இருந்த விஷயத்திற்கும் பெண்கள் இனத்திற்கும் எத்தனை நெருக்கிய சம்பந்தம் இருக்கிறது? மூக்கும் விழியுமாக எங்கேயோ கண்ணுக் கெட்டாத தொலைவில் இருக்கும் பெண்ணைப் போன்றவள்தானே எதிரிலிருக்கும் பெண் என்று நினைக்கும்போதே, அந்த உண்மையை அவள் தோற்றத்தில் கண்டுவிட அவளை ஒரு முறை பார்க்கத் தூண்டுகிறது உள்ளம். அவ்வளவுதான்!

இதென்ன அதிசயம்! நான் பார்க்கும் ஒவ்வொரு தடவையிலும் அந்தப் பெண்ணும் என்னை ஏறிட்டுப் பார்ப்பது தெரிகிறதே! நாம் பார்த்துக் கொண்டிருப்பதைத் தெரிந்துகொண்டு விட்டாளோ? ஆனால் நான் பார்த்த இரண்டு தடவைகளிலும் புருவத்தை லேசாக உயர்த்தி அவள் ஏறிட்டுப் பார்த்த முறையில் வித்தியாசமாக ஒன்றும் தெரியவில்லை.

அம்மா எழுதியிருப்பது போலவே இந்தப் பெண்ணும் மூக்கும் விழியுமாயிருந்தாள். எனவே அம்மா பார்த்து வைத்திருக்கிற பெண் உண்மையாகவே நன்றாயிருப்பாள் என்றுதான் தெரிகிறது. இருந்தால் என்ன? என் முடிவுதான் வேறாயிற்றே, அதைத்தான் எழுதிவிடப் போகிறேனே!

‘களுக்’கென்று அந்தப் பெண் ஒரு தடவை சிரித்தது காதில் விழுந்தது. தலை நிமிர்ந்து பார்த்தேன். அவள் என்னையும் என் பக்கத்தில் இருந்த ஒருவரையும் மாறி



மாறிப் பார்த்தான். அவர் நன்றாகத் தூங்கிக்கொண்டே என்மீது அடிக்கொருதரம் விழுந்து கொண்டிருந்தார். இந்த வேடிக்கையைப் பார்த்துத்தான் சிரித்தாள் அவள். எனக்கும் இயற்கையாகச் சிரிப்பு வந்தது.

"நீங்களும் தூங்குவதுபோல் பாசாங்கு செய்து அவர்மேல் விழுங்கள்!" என்றாள் என்னைப் பார்த்துப் பளிச்சென்று.

எனக்குத் திகைப்பாயிருந்தது. அவளுக்கு எத்தனை துணிச்சல்! இப்படி நேரிடையாகப் பேசுகிறாளே!

நான் சிரித்தேன். என் சிந்தனை அப்படி இப்படியென்று ஓடிக் கடைசியில் முடிவடையும் நிலையிலிருந்தது. இப்போது அதற்கு ஒரு புது வேகம் பிறந்தது! கணீரென்ற அவளுடைய வெண்கலம் போன்ற குரல் என் காதுகளில் ரீங்காரம் செய்தது.

ஒரு நொடியில் ஏற்பட்ட இத்தகைய ஆனந்தத்தை வாழ்க்கை முழுவதும் நிரந்தரமானதாக ஆக்கத்தானே முற்படுகின்றனர் பெற்றோர்? அதை நான் நிராகரிக்கும் காரணம் என்ன? எனக்கே தெரியவில்லையே!

★

டிராம் வண்டியிலிருந்து இறங்கினேன். அவளும் இறங்கி என் பின்னால் நடந்து வந்தாள். ஆச்சரியம் மேலிடத் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்தேன்.

அவளுடைய குரல் மீண்டும் கேட்டது.

"சற்று நில்லுங்கள்! தாங்கள் காலேஜில் படித்தவரோ?" என்று கேட்டாள் திடுதிப்பென்று. மீண்டும் அதிர்ச்சி உண்டாயிற்று என்னுள். வாழ்க்கையில் பெண்களுடன் பழகுவது அதுவே முதல் தடவையாதலால் எனக்கு அத்தகைய அதிர்ச்சி ஏற்பட்டதில் வியப்பில்லை.

"ஆமாம்; தங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டேன்.

"ஊகம்தான்; கையில் ஒரு கடிதத்தை வைத்துக்கொண்டு ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருந்தபோதே கலாசாலையில் படித்தவர் என்பது முகக் குறிப்பில் தெரிந்தது!" என்றாள் கடகடவென்று.

"தாங்களும் கல்லூரியில் படித்தவர் என்று நினைக்கிறேன்!" என்றேன், நான் ஏதாவது சொல்லவேண்டுமே யென்று.

"ஆமாம்; என் பேச்சிலிருந்து தெரிகிறதாக்கும்! இருக்கட்டும். தங்களுடைய கல்யாணத்தைப் பற்றி யாராவது எழுதியிருக்கிறார்களா? இல்லாவிட்டால் அப்படிப் பிரமாதமாக ஆராய்ச்சி செய்வதற்கும், கடிதத்தைப் பிரித்துப் பிரித்துப் படிப்பதற்கும் என்ன இருக்கப்போகிறது?" என்று கேட்டாள்.

பளிச் பளிச்சென்று அவள் பேசியதைப் பார்த்ததும் என் மனதில் ஏற்கெனவே தோன்றிய வியப்பை மீறிக்கொண்டு பயத்தின் உணர்ச்சி தலை நீட்டியது.

"இதெல்லாம் எப்படித் தெரியும் உங்களுக்கு? ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றேன்.

"இதென்ன கேள்வி? இந்த வயதில் உங்களுக்கு மட்டுமில்லை, எல்லோருக்கும் இதைப்பற்றிய சர்ச்சை எழவேண்டியது தானே?" என்று கேட்டாள்.

"ஆனால் என் சித்தாந்தம் வேறு......" என்று நான் சொல்லி முடிப்பதற்குள், "என்ன, கல்யாணமே செய்து கொள்ளுவதில்லை என்று சபதம் செய்திருக்கிறீர்களோ?" என்று அவள் நறுக்கென்று கேட்டாள்.

"அப்படித்தான்; ஆனால் சபதம் ஒன்றும் செய்யவில்லை. பொதுவாகக் கல்யாணத்தில் விருப்பமில்லை எனக்கு!"

"பாவம், வயதாய்விட்ட கிழவர், தாங்கள்! இனிமேல் என்ன வேண்டியிருக்கிறது இல்லற சுகம் என்கிற மனோபாவம் போலிருக்கிறது!" என்றாள்.

எனக்கு அவமானம் தாங்க முடியவில்லை. மௌனமாக இருந்தேன்.

அவள் மறுபடியும் பேசினாள்:

"ஆனால் நான் உங்களைப்போல் கல்யாணமே வேண்டாம் என்று சொல்ல மாட்டேன்; கல்யாணம் என்று பண்ணிக் கொள்ளத்தான் வேண்டும். என்னுடைய எதிர்கால வாழ்க்கையைப் பற்றி முடிவு செய்துகொள்ள இப்போது எனக்கு வேறு யாரும் இல்லாததால் நானேதான் அதைச் செய்துகொள்ள வேண்டும். ஆனால் அதற்கு முன் நான் ஒரு வேலை சம்பாதித்துக்கொள்ளப் பிரியப்படுகிறேன். அதற்காகத்தான் இப்போது போய்க் கொண்டிருக்கிறேன். ஒரு கம்பெனியில் 'டைபிஸ்டு' வேண்டுமாம். இன்று வரச் சொல்லியிருக்கிறார்கள்!" என்று சொன்னாள் அவள்.

என் நெஞ்சு கரைந்துபோய் விட்டது. என்னுடைய அர்த்தமற்ற தீர்மானங்களை

யும் அசட்டு எண்ணங்களையும் பற்றி நினைத்துவிட்ட நெஞ்சில் கையை வைத்து அமுக்கிக் கொண்டேன். ஏனெனில், நான் இப்போது கல்யாணம் செய்து கொள்ளத் தயார்; ஆனால் அவன்? அவனும்தான் தயாராயிருக்கிறான்!

"அவனிடம் இதைப் பற்றிக் கேட்போமா?"—இப்படி எண்ணிக்கொண்டே எதிரே கேட்க வாயெடுத்தேன்.

அவன் சடக்கென்று, "சரி; நாழியாகி விட்டது. நான் நாளைக்கு வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே விடுவிடு வென்று போய் விட்டான்.

அவனைப் பிரிந்து விட்ட துக்கம் தாங்காமல் மெள்ள அவ்விடத்தை விட்டு நகர முயன்றேன். தலை சுற்றுவது போலிருந்தது. கால்கள் பூமியில் சரியாகப் பாவாமல் இருந்தன.

★

திடீரென்று ஒரு மாதிரியான சத்தம் காதைக் குடைந்து கொண்டு ஊடுருவியது. டிராம் வண்டியின் சத்தம்தான். பாரிஸ் கார்னரில் திரும்பிக் கொண்டே அது தன் விசேஷ சத்தத்தைக் கிளப்பிக் கொண்டிருந்தது. இத்தனை நேரம் டிராமில் இருந்திருக்கிறோம் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டே எதிரில் பார்த்தேன். அவனைக் காணோம்!

என்ன ஆச்சரியம்!

வண்டியில் என்னைத் தவிர எல்லோரும் இறங்கிப் போய் விட்டார்கள். கண்டக்டர் என்னை இறங்கும்படி உத்தரவிட்டான்.

இத்தனை நேரமும் கனவுதான் கண்டு கொண்டிருந்தேன். கண்கள் மட்டும் மூடியிருந்தனவே தவிர இந்தக் கனவு மட்டும் என் நினைவிலேயேதான் தோன்றி மறைந்திருக்கிறது. சிந்தனையின் எதிரொலிதான் போலும் இந்தக் கனவு! அந்தராத்மாவின் எதிர்வாதம்தான் அந்தப் பெண்ணின் உருவமாக வந்தது போலும்!

அவ்வளவுதான்; ஆபீசுக்குச் சென்றதும் முதல் காரியமாக அம்மாவுக்குக் கடிதம் எழுதினேன்:—

"உனக்குத் திருப்தி என்று தோன்றினால் கல்யாணத்தை முடிவு பண்ணி விடலாம். உனக்கு எதிராக நான் என்ன சொல்வதற்கு இருக்கிறது?"





# காலக்ஷேபம்





### சரியான பரிசு !

புஸ்தக வியாபாரி :— அம்மா, உங்களுக்கு 'ஸ்வாரஸ்யத்துடன் பாடுவது எப்படி ?' என்று ஒரு புஸ்தகம் கொண்டு வந்திருக்கிறேன்.

ஸ்திரீ :—நான் யாரையும் இந்தப் புஸ்தகம் வேண்டும் என்று கேட்கவில்லையே !

வியாபாரி :— நீங்கள் கேட்கவில்லை. ஆனால் அடுத்த வீட்டுக்காரர் உங்களுக்காக அதை அனுப்பி யிருக்கிறார் !



### மறக்கமாட்டான் !

"எனக்குக் காலை ஐந்து மணிக்கு என்னைக் கொஞ்சம் எழுப்பி விடுகிறாயா ? மறந்துவிடக் கூடாது !"

"அவசியம் எழுப்பி விடுகிறேன். நீ மட்டும் என்னை ஒரு குரல் கூப்பிட்டுவிடு; போதும் !"



### நம்ப வேண்டாம் !

ஒரு திருடன் கோர்ட்டார் முன் தான் திருடியதாக ஒப்புக் கொண்டான். ஜூரர்கள் எல்லாரும் அவன் திருடனல்ல என்று தீர்ப்புக் கூறினார்கள்.

ஜட்ஜ், "என்ன ? அவனே, தான் திருடன் என்று ஒத்துக் கொண்ட பிறகு நீங்கள் அவனைக் குற்றமற்றவன் என்று எப்படிச் சொல்லுகிறீர்கள் ?" என்று கேட்டார்.

ஜூரர்களில் தலைவரான ஒருவர் எழுந்து நின்று சொன்னார் :

"ஐயா, இவனைச் சிறு வயதிலிருந்தே நாங்கள் நன்றாக அறிவோம். எங்கள் வட்டாரத்திலேயே இவனைப் போன்ற பெரிய பொய்யன் கிடையாது ! ஆகவே இவன் சொன்னது அத்தனையும் பொய் !"

### பேஷ் !

தாத்தா (பேரன்மார்களைப் பார்த்துக் கோபத்துடன்) :—டேய், சும்மா சத்தம் நித்தம் போடுகிறீர்களோ, தோலை உரித்து விடுவேன் உரித்து !

பேரன்மார்களில் ஒருவன் :— உரிச்சுக் கொடு, தாத்தா ! நாங்க நாலு பேரும் இந்த ஆரஞ்சுப் பழத்தை உரித்து உரித்துப் பார்க்கிறோம், முடியவில்லை. கைதான் வலிக்கிறது !



### நல்ல யோசனை

மனைவி :—அப்பா இன்றைக்கு ஊருக்குப் போகப் போகிறாரே, அவர் சந்தோஷப் படும்படியாக ஏதாவது செய்து அனுப்ப வேண்டாமா ? என்ன செய்யப் போகிறீர்கள் ?

புருஷன் :—என்னத்தைச் செய்வது ? உன்னை வேணுமானால் உங்கப்பாகூட அனுப்பி வைக்கிறேன் !



### சரிதான் !

உபாத்தியாயர் :—தீவு என்றால் என்ன ?

பையன் :—எந்தப் பிரதேசத்திலிருந்து படகின் உதவியின்றித் தப்பி ஓட முடியாதோ அந்தப் பிரதேசத்துக்குத்தான் தீவு என்று பெயர் !



### கேள்வியும் பதிலும்

கேள்வி :—உங்கள் மண வாழ்க்கை எப்படிக் கழிகிறது ?

பதில் :—அவளைக் காதலித்த காலத்தில் நான் பேசினேன், அவள் என் பேச்சை ரஸித்துக் கேட்டாள் ; கல்யாணமானதும் அவள் பேசினாள், நான் அலுக்காமல் கேட்டேன் ; இப்போது நாங்கள் இருவரும் பேசுகிறோம் ; அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அக்கறையுடன் கேட்கிறார்கள் !






# குழந்தை உள்ளம்

**வி. என். சதாசிவ ராவ்**

ஐந்து வயது ராமு, வீட்டுக் கூடத்தின் ஓர் இருண்ட மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் காலொடிந்த ஒரு சிறு மண் பொம்மை கிடந்தது. தன்னுடைய கண்கள் இரண்டையும் நிமிஷத்திற்கொருதரம் அவன் கசக்கி விட்டுக் கொண்டு, விம்மிய வண்ணமிருந்தான். பாவம், கீழே கிடந்த பொம்மைக்கு அவன் தன்னை ஒப்பிட்டுக் கொண்டிருந்தான்போலும்! ஆனால், பொம்மைக்கோ கால் மட்டும்தான் ஒடிந்திருந்தது; அவனுக்கோ மனமே முறிந்து போயிருந்தது.

"பாப்பா, நீயும் நானும் ஒண்ணு, பாப்பா! நம்மை யார் கவனிக்கப் போறா? கமலுதான் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் முக்கியம்!" என்று கூறிக் கொண்டிருந்தான் அவன்.

ஆம், ராமுவின் குழந்தை உள்ளம் அப்போது புரியாத உணர்ச்சிகளால் தாக்கப்பட்டிருந்தது. 'அப்பா' 'அம்மா' என்றுதான் அவனும், அவன் சகோதரி கமலுவும் தங்கள் பெற்றோரை அழைக்கிறார்கள்; இருவரும் ஒரே விதத்தில் தான் அவர்களிடம் நடந்து கொள்கிறார்கள். ஆனால் பெற்றோர்கள் மட்டும் தங்களிடம் ஏன் வெவ்வேறு விதமாக நடந்துகொள்ள வேண்டும் என்றுதான் ராமுவுக்குப் புரியவில்லை. கமலு, "அப்பா!" என்று ஓடினால், அவர் அவளை வாரியணைத்து முத்தமிடுகிறார்; அம்மா பட்சணம் செய்தால முதன் முதலில் கமலுவுக்குத்தான் கூப்பிட்டுக் கொடுக்கிறாள். ஆனால் ராமு "அப்பா!" என்றாலோ அவர் சீறி விழுகிறார்; அம்மாவைப் பட்சணம்கேட்டாலோ, "தடிப் பயலே! உனக்கென்னடா அவசரம், அதற்குள்ளே?" என்று வைகிறாள்!

அவனும் சிறு குழந்தைதானே? இந்தத் தாரதம்மியம் ஏன் என்று அவனுக்குப் புரியவில்லை. இதனால், அவனுக்குக் கமலுவின் பேரில் சிறிது பொறாமையும், வெறுப்புங்கூட உண்டாயின. அவள் அவனை நெருங்கினால், "போடி சனியனே!" என்று விரட்டுவான். அவள் தாயாரிடம் ஓடுவாள். இதன் பயனாக அவனுக்கு உதை வேறு கிடைக்கும்!

இருந்தாலும் இன்று அவன் மூலையில் தன் மனம் புழுங்க உட்கார்ந்து கொண்டிருந்ததற்கு ஒரு முக்கிய காரணமிருந்தது.



அன்று சமையலறையில் அவனுடைய தாயார் 'ஜிலேபி' செய்து கொண்டிருந்தாள். முதலில் அதை ருசி பார்க்க அடுப்பருகிலேயே உட்கார்ந்து கொண்டிருந்தாள் கமலு. ராமுவின்

நாக்கில் ஜலம் ஊறியது. அவன் மனம் அவனைச் சமையலறையை நோக்கி உந்தித் தள்ளியது. ஆனால் ஒருவிதமான அச்சம் தோன்றி அவனுடைய நடையைத் தளரச் செய்தது. ஆயினும் அவனுடைய மனப் போராட்டம் ஓய்வதாகக் காணவில்லை. கடைசியில், ஜிலேபியை எப்படியாவது ருசி பார்க்க வேண்டும் என்ற ஆவல்தான் வெற்றி பெற்றது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கமலுவின் பக்கத்தில் போய் உட்கார்ந்தான். உடனே வந்தது விபரீதம்! "எங்கேடா வந்தே அதற்குள்ளே?" என்று எரிந்து விழுந்தாள் அவனுடைய தாயார். ஜிலேபியைச் சரியாகச் சுற்ற வராத கோபம் அவன் மேல் திரும்பியது. அவ்வளவுதான்: ராமு மெல்ல எழுந்தான். "கமலு, நீ சமத்தோல்லியோ! நீயும் போ அம்மா! உனக்கு அப்புறம் நிறையத் தருகிறேன்" என்றாள் தாயார். கமலுவும் உடனே எழுந்து அவனுடன் சென்றாள்.

சமையலறையிலிருந்து கடுஞ் சொற்களாலும், குரூரத்தாலும் துரத்தப்பட்டு வெளியே வந்த ராமுவின் கண்கள், அப்பாவின் மேஜைமேல் சென்றன. அதனருகில் கமலு 'திருதிரு' வென்று விழித்தவண்ணம் நின்றுகொண்டிருந்தாள். அவள் ராமுவைக் கண்டதும், "அம்மா அம்மா, ஓடி வா! இங்கே வந்து ராமு செய்த வேலையைப் பார்!" என்று கூச்சலிட்டாள்.

இதைக் கேட்டதும் ராமுவின் மனம் திடுக்கிட்டது. தான் செய்த தவறு என்னவென்றே அவனுக்குத் தெரியவில்லை. கமலு எதற்காக அம்மாவைக் கூப்பிட்டாள் என்று அறிய அவன் மேஜையின் பக்கம் சென்றான். அவ்வளவுதான்; அவன் உள்ளத்தில் விவரிக்க வொண்ணாத பீதி குடிகொண்டுவிட்டது. காரணம், அவன் கண்ட காட்சிதான்! தந்தையின் மேஜைமேலிருந்த மைக்கூடு கவிழ்க்கப்பட்டு அதன்மேலிருந்த காகிதங்களெல்லாம் ஒரே மசி மயமாக இருந்தன. இதைப் பார்த்ததும் பாம்பைக்கண்டவன்போல் ராமு மயங்கி நின்றான். 'சுரீர்' என்று முதுகில் ஓர் அடி விழுந்தபோதுதான் அவன் தன் உணர்வை அடைந்தான். மூக்கில் எள்ளும், கொள்ளும் வெடிக்க அவன் தாயார் அவனுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்தாள். "நான் கொட்டவில்லை, அம்மா! கமலுதான்........" என்று ஆரம்பித்தான் ராமு.

அதற்குள் இன்னொரு அடி விழுந்தது. அதைத் தொடர்ந்து, "குழந்தையின் மேலா பழியைப் போடுகிறாய்!" என்ற வசவும் வந்தது.

அதற்கு மேலும் அங்கே நின்று அடி வாங்குவதற்கு ராமு விரும்பவில்லை. அந்த இடத்தை விட்டு உடனே நகர்ந்து விட்டான். தன்னுடைய துயரில் பங்கெடுத்துக்கொள்ளவே அவன் கால் ஒடிந்த பொம்மையின் உதவியை அப்போது நாடியிருந்தான்.

★

ராமுவின் தாயார் இயற்கையிலேயே கல் மனம் படைத்தவ ளல்ல. ஒரு தாயார் தன் இரு சேய்களை வித்தியாசமான மனப்பான்மையுடன் பார்க்க மாட்டாளல்லவா? ஆனால் எந்தத் தாய்தான் சில சமயம் தன் குழந்தைகளை அடிக்காமலோ, கடிந்துகொள்ளாமலோ இருப்பாள்?

ராமு தன் வயதுக்கு மீறிய குறும்புத்தனமுள்ளவன். அடிக்கடி பாத்திரங்களையோ, வேறு பொருள்களையோ உருட்டுவான். இதனால் அவன் பெற்றோர் அவனை மிரட்டுவது வழக்கம். சில சமயங்களில் அவன் குறும்புத்தனம் செய்யாமலிருக்க முன் எச்சரிக்கை செய்வதுபோல் அவனை அவர்கள் அதட்டுவதுமுண்டு. இதனால் தன்னைக் கண்டாலே தன் பெற்றோருக்கு வெறுப் புண்டாகிறது என்று எண்ணினான் ராமு.

அன்று மத்தியானம் ராமு, தூங்கி எழுந்தபோது வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. வாசலுக்கு வந்தான். வண்டியிலிருந்து அவனுடைய



சித்தி — அம்மாவின் தங்கை — இறங்கிக்கொண்டிருந்தாள். "சித்தி!" என்று ஓடினான் அவளிடம். அவளும் அவனைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு உள்ளே சென்றாள்.

அடுத்த சில நாட்கள் சமையல் முதலிய வேலைகளை ராமுவின் சித்தியான சாரதா செய்து வந்தாள். ராமுவின் பொழுதும் குதூகலமாகக் கழிந்தது. ஆயினும் அந்த வீட்டில் தன் தாயை எங்குமே காணாததால் அவனுக்கு ஏதோ ஒரு மாதிரி இருந்தது. "அம்மா எங்கே?" என்று சித்தியைக் கேட்பதற்காகச் சமையலறைக்குச் சென்றான். அவளையும் அங்கே காணவில்லை. ஒவ்வொரு அறையாகச் சென்று சென்று பார்த்தான். ஓர் அறையில் அவனுடைய சித்தி இருந்தாள்; அவள் அருகிலிருந்த ஒரு கட்டிலில் ராமுவின் தாயார் படுத்துக்கொண்டிருந்தாள். அவளுடைய வாய் மெல்ல முனகிக்கொண்டிருந்தது. உள்ளே போகலாமா, வேண்டாமா என்று தயங்கிக்கொண்டே நின்ற ராமு, கடைசியில் தாயிடம் செல்லாமலே திரும்பிவிட்டான். வாசல் பக்கம் அவன் போனபோது 'கார்' ஒன்றிலிருந்து 'லேடி டாக்டர்' ஒருத்தி உள்ளே வருவதைக் கண்டான். அவள் வந்த காரணம் அவனுக்குத் தெரியவில்லை.

மாலை ஏழு மணி இருக்கும். மாடியில் விளையாடிக்கொண்டிருந்த இரு குழந்தைகளுக்கும் ஒரு புதிய குரல் கேட்டது. அது ஒரு சிறு குழந்தையின் அழுகுரல். இருவரும் கீழே இறங்கித் தங்கள் தாயார் இருந்த அறையின் பக்கம் வந்தனர். அந்த அறையின் வாசற்படியில் ராமுவின் தந்தை நின்று கொண்டிருந்தார். கமலு நேராக உள்ளே ஓடினாள். "ராமு, வா!" என்று அழைத்தார்கள் அவனுடைய சித்தியும் தாயும். அவன் தன் தாயின் முகத்தையும், தந்தையின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான். ஆனால் உள்ளே செல்லவில்லை. 'அவர்கள் என்ன சொல்வார்களோ என்னவோ!' என்று நினைத்தான் போலும்!

*

அடுத்த நாள் காலை ஆறு மணி இருக்கும். வெகு சீக்கிரமே எழுந்துவிட்ட ராமு ஒரு கணம் இப்படியும் அப்படியுமாகப் பார்த்தான். கூடத்தில் யாரும் இல்லாமற் போகவே மெல்ல மெல்லத் தன் தாயார் இருந்த அறைக்குள் நுழைந்தான். அப்போது அவள் கண்களை மூடிக்கொண்டிருந்தாள். மெல்ல எட்டிப் பார்த்தான். தாயின் அருகில் ஒரு சிறு குழந்தை — ஆண் குழந்தை — படுத்துக் கொண்டிருந்தது.

சிறிது நேரம் அதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த ராமு, "பையா! வா, வா! என்னோடு கூட நீ வேறே அடி வாங்க வந்தாட்டியா!" என்றான்.

தூங்காமல் கண்களை மட்டும் மூடிக் கொண்டிருந்த அவன் தாயாரும், அப்போதுதான் உள்ளே பிரவேசித்துக் கொண்டிருந்த அவனுடைய சித்தியும் தந்தையும் இந்தச் சொற்களைக் கேட்டனர். அவ்வளவுதான்; தவிர்க்க முடியாத ஒருவித அதிர்ச்சி அவர்கள் மூவருக்கும் ஏககாலத்தில் உண்டாயிற்று.

"என் கண்ணே!" என்று ராமுவை வாரி எடுத்து அணைத்துக் கொண்டாள் தாயார். என்றுமில்லாமல் தாயார் தன்னை ஏன் அன்புடன் அணைத்துக் கொண்டாள் என்றோ, அவளுடைய கண்களினின்று ஏன் கண்ணீர் பெருகுகிறது என்றோ, அவன் தந்தை ஏன் பேசாமல் தன்னையே பார்த்துக் கொண்டு நிற்கிறார் என்றோ அவனுடைய சிறு உள்ளத்துக்கு எட்டவில்லை!

**காந்தி மகான் திருவாக்கு - 7**

தற்போது நமக்கு அவசியம் தேவையாக இருப்பது ஒரு புதிய மதம் அல்ல; பல்வேறு மதத்தினர் ஒருவருக்கொருவர் மரியாதையையும் சகிப்புத் தன்மையையும் காட்ட வேண்டியதுதான் அவசியம். நம்மிடையே யுள்ள மத பேதங்களையும் கலை பேதங்களையும் ஒழித்துவிட்டு எல்லாவற்றையும் ஒரே மாதிரியாக்க வேண்டுமென்று நாம் விரும்பவில்லை. அந்த பேதங்களுக்கும் வேற்றுமைகளுக்கும் மத்தியில் ஒரு ஐக்கியத்தை உண்டாக்கவே விரும்புகிறோம். தலைமுறை தத்துவமாக இருந்து வரும் நம்முடைய பழக்க வழக்கங்களையோ, ரூசோன நிலைமையையோ அல்லது, அதைப் போல நம்மைச் சுற்றியிருக்கும் ஸ்திரமான ஒன்றையோ அழிக்க முயன்றால், அது நடக்காது. எல்லா மதங்களுக்கும் நடுநாயகமாய் விளங்கக் கூடிய கருத்து ஒன்றே. அது பற்பல வடிவங்களில் மறைந்திருக்கிறது. விவேகிகள் பல்வேறு மதங்களின் மேல் ஓட்டைத் தள்ளிவிட்டு உள்ளே புதையுண்டிருக்கும் ஒற்றுமைப்பட்ட கருத்தைக் காண்பார்கள்.

# பதில் வருமா?

எஸ்.வி.எஸ்

என்னிடம் உள்ள எத்தனையோ நல்ல பழக்கங்களில், வந்த கடிதத்துக்கு உடனே பதில் எழுதாமல் இருப்பது என்பதும் ஒன்று. இதை என் மனைவி இடித்துக் காட்டுவது போல் வேறு யாருமே இடித்துக் காட்டுவது கிடையாது. அதுவும் அவளுடைய தம்பி கோபாலனிடமிருந்து கடிதம் வந்து விட்டால் என்பாடு ஆபத்துத்தான்.

ஆபீஸிலிருந்து வந்ததும் "என்ன! இன்றைக்காவது கோபாலனுக்குப் பதில் எழுதினீர்களா?" என்பாள்.

ஆபீஸிலிருந்து களைத்துச் சோர்ந்து வருபவனுக்கு எப்படி யிருக்கும் இதைக் கேட்க? எனக்கோ கோபம் கோபமாக வரும்!

"இன்னிக்கும் எழுதவில்லை. ஊம்... என்ன செய்யச் சொல்லுகிறாய் அதற்கு?" என்பேன் கோபமாக.

"பதில் எழுதினேளா என்று கேட்டால் அதற்கு இப்படிக் கோபித்துக் கொள்ள வேண்டுமா? ஆமாம், இந்த வீட்டில் எனக்கு ஒன்று கேட்கக் கொள்ள உரிமை யிருக்கா, என்ன?" என்று கடகடவென்று கண்ணீர் பெருக்கி விடுவாள்.

பிறகு நான் கெஞ்ச வேண்டியது தானே! — இல்லா விட்டால் காப்பி கிடைக்குமா? நீங்களே சொல்லுங்கள்!

மறு நாள் ஆபீசுக்குப் புறப்படும் போது "என்ன! இன்றைக்காவது மறக்காமல்......" என்று நீட்டுவாள்.

எனக்குத்தான் நேற்றைய விவகாரம் முழுதும் அடியோடு மறந்து போயிருக்குமே! ஆகவே, "மறக்காமல் என்ன பண்ணணுங்கறே?" என்பேன்.

அவள் சொல்வாள்:— "இப்பவே மறந்துட்டேளா? முடியாகிலும் போட்டு வைத்துக் கொள்ளுங்கள் — கோபாலனுக்குப் பதில் எழுத வேணும் என்று."



அவள் விருப்பப்படி நான் முடி போட்டுக் கொண்டு 'பிறகு எதற்காக முடி போட்டேன் என்று ஞாபகம் வராமல் திண்டாடுவேன்.

இப்படி இருக்கும்போது, நான் ஒரு அவசர காரியமாக கோபாலனுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அதற்கு ஒரு வாரமாகப் பதில் வரவில்லை.

இது சம்பந்தமாக நான் ஆபீசிலிருந்து வந்ததும் அவள் "ஆபீசுக்கு ஏதாகிலும் கடிதம் வந்ததோ?" என்று கேட்பாள்.

நான் "வீட்டுக்கு ஏதாகிலும் கடிதம் வந்ததோ?" என்று அவளைக் கேட்பேன்.

இவ்விதம் கொஞ்ச நாளாக நடந்து வந்தது. ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை காலை, "நான் பதில் எழுதாவிட்டால் தான் சொல்லுவாய். இப்போது உன் தம்பியைப் பார்! கடிதம் எழுதிப் பத்து நாளாகிறது. பதிலையே காணோம்" என்று என் மனைவியிடம் சொன்னேன்.

"அவனை ஒன்றும் சொல்லாதீர்கள்! அப்படி அவன் பதில் எழுதாமலிருப்பவன் அல்ல. அவனுக்கு என்ன அசந்தர்ப்பமோ, என்னவோ!"

நான் முகத்தைக் கடுகடுப்பாய் வைத்துக்கொண்டு "தம்பி என்றால் பரிந்து கொண்டு வருவதைப் பார்!" என்றேன்.

அதற்குள், "சாமி!" என்று ஒரு குரல் வந்தது.

"யார்?" என்றேன்.

"நான்தான் முனிசாமி!" என்ற பதில் வந்தது.

முனிசாமி என் நீண்ட நாளைய சலவைத் தொழிலாளி.

"துணி கொண்டு வந்திருக்கிறாயா?"

"கொண்டு வந்திருக்கிறேனுங்க!"

"அழுக்கு எடுத்துக் கொண்டு போகிறாயா?" என்றேன்.

"கொண்டு போறேனுங்க" என்றான்.

அவன் சலவை செய்து கொண்டு வந்த

துணிகளைக் கணக்குப் பார்த்து எண்ணி வைத்து விட்டு, அழுக்குத் துணிகளை எடுத்துப் போட்டேன்.

முனிசாமி ரொம்பவும் யோக்கியமானவன். ஒவ்வொரு சமயம் சட்டையில் ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் நோட்டுடன் போட்டிருப்பேன். அதையும் சலவை செய்து விட்டு "சாமி உங்கள் சட்டைப் பையில் ரூபாய் நோட்டு இருந்தது போலிருக்குங்க. அது, இஸ்திரி போடும்போதுதான் இஸ்திரிப் பெட்டிக்குத் தட்டுப் பட்டுதுங்க!" என்று சொல்லிச் சாயம் வெளுத்த ரூபாய் நோட்டைக் கொண்டு வருவான். ஆகவே, "டேய், சட்டையிலே பித்தான் இருக்கும்! 'கோட்' பையில் சில்லறைக் காசு இருக்கும்! அதெல்லாம் பார்த்து எடுத்து வை!" என்றேன்.

எல்லா அழுக்குத் துணியையும் எடுத்துப் போட்ட பிறகு, சலவைக் கணக்குப் புஸ்தகத்துடன் கணக்கு எழுத வந்து உட்கார்ந்தேன்.

முனிசாமி, "இந்தாருங்க சாமி, ஒரு சட்டையிலே இரண்டு பித்தளைப் பித்தான் இருந்தது: ஒரு கோட்டுப் பையில் இரண்டு காகிதத் துண்டுகளும் ஒரு கவரும் இருந்தது!" என்று சொல்லி என்னிடம் கொடுத்தான்.

அந்தக் கவரைப் பார்த்தேன். பத்து நாளைக்கு முன் கோபாலனுக்கு நான் எழுதிய அந்தக் கடிதத்தைத் தபால் பெட்டியில் சேர்க்க மறந்துபோய் என் கோட் பைக்குள்ளேயே வைத்திருக்கிறேன். அது இத்தனை நாளும் சொஸ்தமாகத் தூங்கி விட்டு, இன்று முனிசாமி கைக்குக் கிடைத்திருக்கிறது!

எனக்குத் தலை கிறுகிறு வென்று சுற்றியது. 'அநாவசியமாய் கோபாலனைப் பதில் எழுதவில்லை என்று திட்டிக் கொண்டிருந்தோமே; தபால் பெட்டியில் கடிதத்தைச் சேர்க்காமலிருந்து விட்டால் பதில்தான் வருமா?' என்று மிகவும் வருத்தப்பட்டேன்.

அடுத்த கணம் எனக்கு ஒரு திகில் உண்டாயிற்று.

இந்த விஷயம் என் மனைவிக்குத் தெரியாமலிருக்க வேண்டுமே என்ற திகில்தான் அது.

ஒருவேளை பின்னால் நிற்கிறாளோ என்று பயந்து கொண்டே நான் திரும்பிப் பார்த்தேன்.

நல்லவேளை! அவன் அப்போது அங்கே இல்லை!

# தப்பித்துக் கொண்டான்!



சென்ற மகா யுத்தம் நடந்துகொண்டிருந்தபோது, ஜெர்மன் இரகசியப் போலீஸ்காரர்கள் மூன்று குடியானவர்களுடைய வீட்டைச் சோதனை போட்டார்கள்.

அவர்கள் முதல் குடியானவனைப் பார்த்து, "நீ உன்னுடைய கோழிகளுக்கு என்ன உணவு போடுகிறாய்?" என்று கேட்டார்கள்.

"அரிசி" என்றான் அவன்.

"அரிசியா?—ஜனங்கள் உணவுக்கு வழி இல்லாமல் சாகும்போது, பயலே, நீ அரிசியையா கோழிகளுக்குப் போடுகிறாய்?—உன்னைக் கைது செய்திருக்கிறோம்!" என்று சொல்லிவிட்டு, இரண்டாவது குடியானவனைப் பார்த்து, "நீ என்ன உணவு போடுகிறாய்?" என்று கேட்டார்கள் போலீஸ்காரர்கள்.

அவன் நடுங்கிக்கொண்டே, "சோளம்" என்றான்.

"சோளமா? — முட்டாளே, சோளம் ஜனங்களுடைய உணவுப் பொருள் அல்லவா? சரி, உன்னையும் கைது செய்திருக்கிறோம்" என்று சொல்லிவிட்டு மூன்றாவது குடியானவனைப் பார்த்து, "நீ என்ன உணவு போடுகிறாய்?" என்று கேட்டார்கள்.

முதல் இரண்டு பேருக்கும் நேர்ந்த கதியைப் பார்த்த அவன் சற்று நேரம் யோசனை செய்துவிட்டு, "நான் உணவு எதுவும் கொடுப்பதில்லை. பணத்தைக் கையில் கொடுத்து விடுகிறேன். அவைகள் தங்களுக்கு இஷ்டமான தீனியைத் தாங்களே வாங்கிச் சாப்பிட்டுக் கொள்ளும்!" என்றான்.

**தேனி, நாடார் சரஸ்வதி உயர்தர கலாசாலை அபிவிருத்தி நிதிக்காக**



# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

**உதவும் சங்கீதக் கச்சேரி**

*

ஆஸ்தான வித்வான்
மைசூர் டி. சௌடய்யா ... பிடில்
கல்பாத்தி ராமனுதன் ... மிருதங்கம்
ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

*

**12 - 3 - 48 வெள்ளிக்கிழமை**
**மாலை 5 - 30 மணிக்கு**

தேனி, நாடார் சரஸ்வதி ஹைஸ்கூல் காம்பவுண்டில்

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தலைமை வகிப்பார்கள்

டிக்கெட்டுகள் : ரூ. 250/: 100/: 50/: 25/: 10/:

நாடார் சரஸ்வதி உயர்தரக் கலாசாலைக் கமிட்டி, தேனி

ஒலிபெருக்கி: திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்விஸ்

குறிப்பு:— ஏற்கனவே 20-2-48-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மேற்படி கச்சேரி நமது மாபெருந் தலைவர் மகாத்மா காந்தி அவர்களின் துக்ககரமான பிரிவை முன்னிட்டு, 12-3-48-க்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. மேற்படி கச்சேரிக்காக 30-1-48, 20-2-48 தேதிகளுக்கு வழங்கப்பட்ட டிக்கெட்டுகள் 12-3-48 கச்சேரிக்கு செல்லுபடியாகும்.

---

# காலச்சக்கரம்



**சிறந்த வாரப் பத்திரிகை**

அரசியல், சமூகம், கலை, இலக்கியம் முதலிய அம்சங்களைச் சிறப்பாகக் கொண்டு புதியமுறையில் வெளியாகும் வாரப் பத்திரிகை. அரிய சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும் எழுதுகிறார்கள்.

சிறந்த சிறு கதைகள், நாடகங்கள், கவிதைகள் இதில் வெளியாகின்றன. டெல்லி, இலங்கை ஆகிய இடங்களிலிருந்து விசேஷ நிருபர் கடிதங்கள் அவ்வப்போது இடம் பெறும்.

ஆசிரியர்கள் : பெ. தூரன்
கே. எஸ். பெரியசாமி

வருட சந்தா ரூ. 13 - 0 - 0 அரை வருட சந்தா ரூ. 6 - 8 - 0

**தனிப் பிரதி 4 அணு**

உங்களுக்கு ஒரு பிரதி கிடைத்ததா? இல்லையேல் உடனே எழுதுங்கள்

ஏஜன்ஸி நிபந்தனைக்கு எழுதுக

**மானேஜர், காலச்சக்கரம், கோயமுத்தூர்**

# இப்பொழுது— டார்ச் பிராண்ட் DDT பவுடர்!

நீர்துளி ரூபத்திலுள்ள டார்ச் பிராண்ட், அதி சக்தி வாய்ந்த கீடநாசினி. மலிவுக்கும் தீவிர காரியசித்திக்கும் பாரதநாடு பூரா பிரசித்தி வாய்ந்துள்ளது. பூச்சி புழுக்களுடனுள்ள போராட்டத்தில் விசேஷ விதியான உபயோகங்களுக்காக டார்ச் பிராண்ட் DDT பவுடரும் இப்பொழுது கிடைக்கும்.



### புத்தகங்கள்

இந்த பவுடரை உங்கள் ஷெல்பிலுள்ள புத்தகங்களுக்கிடையே தூவினால் வெள்ளை பாச்சைகள், புத்தகப் புழுக்கள் யாவும் சாகும். அவைகள் மேலும் அணுகா. பவுடரால் புத்தகங்கள் கறைப்பட்டு நாசமாகாது.

### உடுமணிகள்



உடுமணிகளுக்கிடையே தூவினால் இந்த ஜாலப் பவுடர் துணிகளை நாசமாக்கும் பூச்சி புழுக்களை சாக அடிக்கும். துணிகள் கறைப்பட்டு நாசமாகாது.



### கரப்புகள்

டார்ச் பிராண்ட் DDT கரப்பான் பூச்சிகளுக்கெதிராக — அவைகள் எங்கு காணப்படினும் — விசேஷ பயனளிக்கவல்லது. இதை சமையலறை ஷெல்புகள் மீதும், அலமாரிகளிலும் இருள் சூழ்ந்த மூலை முடுக்குகளிலும் தூவுக!

### தோட்டங்கள்



புஷ்பச் செடிகள், பழச் செடிகள், காய்கறிச் செடி கொடிகள் — இவைகளை நாசமாக்கும் பூச்சிகளையும், கோழிப் பண்ணைகளைத் தின்றிடும் பூச்சி புழுக்களையும் ஒழிப்பதற்கும் இந்த பவுடர் இன்றியமையாதது.

## இன்றையிலிருந்தே உபயோகிக்கத் தொடங்குங்கள்!



(10% பூர்ண வீரியமுடைய DDT அடங்கியது)
மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் ஹானியற்றது.

தயாரிப்பவர்கள்: பிரோக்ரெஸ்ஸிவ் கெமிகல்ஸ் கார்ப்பொரேஷன் லிட்.,
ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்: டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# சந்திரஹாரம்

ஆசிரியர் ........ மொழிபெயர்ப்பு

பிரேம்சந்த் ...... ரா. வீழிநாதன்

## நாற்பத்தாறாம் அத்தியாயம்

## வேசி வீசிய பாச வலை

இன்னும் ஒரு மாதம் கடந்துவிட்டது. அந்த வழக்கு ஹைகோர்ட்டில் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படும் தேதியும் குறித்தாகிவிட்டது. ரமாநாத் பழைய பயங்கொள்ளி ரமாநாத்தாகவே மாறிவிட்டான். அதிகாரிகள் சொன்ன சொற்படியெல்லாம் ஆட ஆரம்பித்துவிட்டான். குடி முதலிய துர்ப் பழக்கங்களும் அவனிடம் குடிகொள்ள ஆரம்பித்துவிட்டன. இன்பக் கேளிக்கைகளில் அவன் தன் மனம் போனவாறு ஈடுபட ஆரம்பித்துவிட்டான். அதிகாரிகள்தான் அவனுக்கு ஆனந்தம் தரும் விஷயத்தில் எவ்விதக் குறைவும் வைப்பதில்லையே! ஆகவே ஜோஹிரா என்றொரு வேசி அடிக்கடி அவன் பங்களாவுக்கு வந்து போகலானாள். அவள் கானாவட்டத்தில் அவனுடைய பாட்டில் மயங்கித் தன் மதியையே பறிகொடுத்து விட்டான்.

ஒரு நாள் ரமாநாத் அவளைப் பார்த்து ஆசை ததும்பும் குரலில், "ஜோஹிரா! நாம் இருவரும் இப்படி நெருங்கிப் பழகுகிறோமே! நீ என்னை உன் மோக வலையில் கட்டிப் போட்டுவிட்டால், அப்புறம் என் வாழ்க்கை ஒரே அழுகை மயமாக அல்லவா போய்விடும்? சாதியில் வேசியான உன்னை எப்படி நம்பமுடியும்?" என்றான்.

ஜோஹிராவுக்கு அவன் அப்படிப் பேசியதில் உள்ளூற மகிழ்ச்சி. அவள் தன் காமக் கலக்கம் தோய்ந்த, அகன்ற நீண்ட விழிகளால் அவனைப் பார்த்தவாறு, "ஆமாம், நீங்கள் நியாயத்தைத்தானே சொல்லுகிறீர்கள்! நாங்களோ சாதியில் வேசிகள்! நன்றி கெட்டவர்கள்! அப்படியிருக்கும் பொழுது, எங்களை யாராவது நம்புவார்களா? அப்படி நம்பினால்தான் உருப்படுவார்களா?" என்றாள்.

"அப்படியானால் நான் சொல்லுவதில் தவறு ஒன்றும் இல்லையே!" என்றான் ரமாநாத்.

"இல்லை, ஒரு தவறும் இல்லை. அன்பே உருவெடுத்து, எங்களை நாடி வரும் உங்களைப்போன்ற பிறவிகளுக்கு, நாங்கள் எங்கே சரியானபடி மரியாதை செலுத்துகிறோம்? என்ன இருந்தாலும் நாங்கள் நன்றி கெட்ட வேசிகள்தானே?" என்றாள் ஜோஹிரா.

"சந்தேகமேயில்லை!"

"மன்னிக்கவேணும். நீங்கள் ஆண்பிள்ளைகளின் கட்சியை ஆதரித்துப் பேசுகிறீர்கள். உண்மை என்னவென்றால், மனத் துயரத்தை மறந்து ஆனந்தமாகப் பொழுதைப் போக்கலாம் என்ற எண்ணத்துடன்தான் உங்களைப் போன்றவர்கள் எங்களை நாடி வருகிறார்கள். எங்களிடம் நீங்கள் நல்லெண்ணத்துடன் வந்தால் அல்லவா, நாங்கள் உங்களிடம் நன்றியுடன் நடந்துகொள்ள முடியும்? எத்தனையோ அப்பாவிப் பெண்கள் ஆண்களின் ஆசைப் பேச்சில் மயங்கித் தங்கள் வாழ்வையே குட்டிச் சுவராக்கிக் கொண்டு நாற் சந்திகளில் நிற்கிறார்கள். இதற்கெல்லாம் மூல

காரணம் இந்த ஆண்கள்தான் என்பது உலகத்தாருக்குத் தெரிந்தால்தானே! ஆண்கள் செய்யும் அட்டூழியம் எல்லாம் உலகத்துக்குத் தெரிந்தால் நீங்கள் இம்மாதிரியெல்லாம் பேசுவீர்களா? எங்கள் தப்பிதம் என்றுதான் சொல்ல வேண்டும். சிறு சுகத்துக்காக எங்களை நாடி வரும் ஆண்களை நம்பி மோசம் போகிறோமே, அது எங்கள் அறிவீனம்தானே! கழுகின் கூட்டில் எங்கேயாவது இறைச்சி கிடைக்குமா? ஆனால் இன்னொன்றும் சொல்லுகிறேன், தாகத்தினால் தவிக்கும் மனிதன் வற்றின கிணற்றை எட்டிப் பார்த்தால், அதை அவனுடைய குற்றம் என்று சொல்லுவது கொஞ்சங்கூட நியாயம் இல்லை" என்றாள் ஜோஹிரா.

அன்று இரவு வீட்டுக்குப் போகும் பொழுது ஜோஹிரா ஸப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "ஆள் வழிக்கு வந்துவிடுவார் என்று தோன்றுகிறது. இன்னும் இரண்டொரு நாட்களில் தம் வீட்டுக்காரியின் பெயரையே மறந்தாலும் மறந்துவிடுவார்!" என்ற நற்செய்தியைச் சொன்னாள்.

ஸப் இன்ஸ்பெக்டர் சந்தோஷம் பொங்கும் குரலில், "எதற்காக உன்னைக் கூப்பிட்டோம் என்று நினைக்கிறாய்? நீ மனது வைத்தால் எந்தக் காரியந்தான் ஆகாது? அவருடைய பெண்டாட்டி இங்கிருந்து புறப்பட்டுப் போய்விட வேண்டும். அதற்கு நீ ஏதாவது வழி செய்தால்தான் எங்கள் கவலை தீரும். சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் அவனைத் தன் வலையில் போட்டுக்கொண்டிருப்பார்களோ என்று தோன்றுகிறது! அவர்கள் காரியமே முழு மோசம்!" என்றார்.

ஜோஹிரா அடிக்கடி அங்கே வந்து போகலானாள். நாளடைவில் ரமாநாத் அவளிடம் தன் மனதைப் பறி கொடுத்து விட்டான். முதலில் ரமாநாத் அவளுடைய அன்பில் மயங்கி விட்டது போலக் காட்டிக் கொண்டு, அதிகாரிகளின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்று தான் விரும்பினான். ஆனால் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுதே அழுது விடுகிறார்களே! அதைப்போல் அவனுடைய காதல் நாடகம் காதல் வெறியாகவே மாறி விட்டது. ஜோஹிரா அவன் கண்களுக்குக் காதல் தெய்வமாகவும், நம்பிக்கைக்குப் பாத்திரமானவளாகவும் காட்சி அளிக்க ஆரம்பித்தாள். பத்மாவைப் போல ஜோஹிரா அவ்வளவு அழகியல்ல. ஆனால் பேசில் பலே கைகாரி; தளுக்கு மினுக்கில் நிகரற்றவள்; ஆளை மயக்கி வசீகரிப்பதில் அவளுக்கு இணை அவளே தான்! ஆகவே ரமாநாத்தின் உள்ளத்தில் புதுப் புதுக் கற்பனைகள் உதிக்கத் தொடங்கின.



ஒரு நாள் அவன் ஜோஹிராவைப் பார்த்து, "ஜோஹிரா, நாம் பிரிந்துபோக வேண்டிய காலம் நெருங்கிவிட்டது. இன்னும் நாலைந்து நாட்களில் நான் இங்கிருந்து புறப்பட்டு விடுவேன். அப்புறம் உனக்கு என் நினைவு எங்கே வரப்போகிறது?" என்றான்.

"நீங்கள் எங்கேயும் போகக்கூடாது. இங்கேயேதான் இருக்க வேண்டும். ஒரு நல்ல வேலையாகப் பார்த்துக் கொண்டு விட்டீர்களானால், அப்புறம் நாம் இருவரும் ஆனந்தமாக வாழலாம்" என்றாள் ஜோஹிரா.

ரமாநாத் அவளுடைய பேச்சில் லயித்து, "உண்மையாகவா சொல்லுகிறாய், ஜோஹிரா? என்னை ஏமாற்றிவிட மாட்டாயே! என் மேல் ஆணை வைத்துச் சொல்லு, பார்ப்போம்" என்றான்.

"உங்களுக்குச் சந்தேகமாயிருந்தால், என்னுடன் 'நிக்கா' வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். 'நிக்கா'வில் அருவருப்புத் தோன்றினால் புரோகிதர்களைக் கூப்பிட்டுக் கல்யாணமே வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். இதைத் தவிர நான் வேறெப்படி உங்களுக்கு நம்பிக்கை ஊட்ட முடியும்?" என்றாள் ஜோஹிரா.

ரமாநாத் அவளுடைய கள்ளங்கபடமற்ற அந்த அன்பை அறிந்து மனதுக்குள் மிகவும் பரவசமடைந்தான். ஜோஹிராவின் வாயிலிருந்து வெளி வந்த அந்தச் சொற்களுக்குத்தான் எத்தனை மோஹன சக்தி! 'பெரிய பெரிய பிரபுக்கள் எல்லாம் இவளுடைய காலடிகளில் விழுந்து தவம் கிடக்கத் தயாராயிருக்கும் பொழுது இவள் என் பொருட்டு அனைத்தையும் தியாகம்

செய்யத் தயாரா யிருக்கிறானே!' என்பதை நினைக்கும் பொழுது ரமாகாந்துக்கு மட்டற்ற மகிழ்ச்சி உதித்தது. எந்தச் சமூகத்தில் மற்றவர்களுக்கு மணல் தான் கிடைக்கிறதோ, அதே சமூகத்தில் ஒருவனுக்கு மட்டும் தங்கக் கட்டிகளாகவே கிடைக்கத் தொடங்கி விட்டால், அவனைப் பெரும் பாக்கியசாலி என்றுதானே சொல்லவேண்டும்?



வெகுநாட்கள்வரை ரமாகாந்தின் மனத்தில் போராட்டம் மூண்டிருந்தது. பத்மாவுடன் சேர்ந்து வாழ நேரிட்டால் அவன் வாழ்க்கை சாரமற்றதாகவும் 'சப்'பென்றும் ஆகிவிடும் அல்லவா! அவள் அடிக்கொரு தடவை சத்தியத்தையும் தர்மத்தையும் எடுத்துக் கூறிக்கொண்டு குறுக்கே நிற்பாள். அதன் பயனாக அவனுடைய வாழ்க்கை ஒரு நீண்ட தவமாகவும், நிரந்தர சாதனையாகவும் உருமாறி விடும். சாத்வீக வாழ்வு எந்தக் காலத்திலுமே அவனுடைய குறிக்கோளாக இருந்ததில்லை. பாமர மக்களைப் போலவே அவனும் போக வாழ்வில் மூழ்கித் திளைக்கத்தான் விரும்பினான். அதனால்தான் அவனுடைய மனது பத்மாவை வெறுத்து ஜோஹிராவை நாடியது. அதற்குப் பக்கபலமாக, 'எத்தனையோ வேசிகள் குடும்பப் பெண்களைப் போல நன்றி விசுவாசத்துடன் நடந்து கொள்ளவில்லையா? எத்தனையோ குடும்பப் பெண்களின் மனம் சஞ்சலப்படவில்லையா?' என்பது போன்ற விஷயங்களும் நினைவுக்கு வந்தன. ஆகவே அவன் 'இந்த வெளி வேஷங்களை யெல்லாம் களைந்து எறிந்து விடுவோம். பிறவியினால் எவனுமே குற்றமற்றவனாகவோ, குற்றமுள்ளவனாகவோ ஆகிவிடுவதில்லை. அவையெல்லாம் சூழ்நிலையைப் பொறுத்த விஷயங்கள்' என்ற முடிவுக்கு வந்துவிட்டான்.

ஜோஹிரா தினம் வருவாள்; இன்றுமொரு அழுத்தமான முடிச்சுப் போட்டு விட்டுப் போவாள். இப்படியே தினம் நடந்து கொண்டிருந்தது. இம்மாதிரி நிலைமையில், புலனடக்கமுள்ள வாலிபர்களின் மனமே தடுமாறத் தொடங்கி விடும் என்றால் ரமாகாந்தைப் போன்ற இன்பக் கனவு காணும் வாலிபர்களைப் பற்றிக் கேட்பானேன்? இறக்கை முளைப்பதற்கு முன்பே கூட்டில் அடைக்கப்பட்ட பறவையைப் போன்ற நிலைமையில் சிக்குண்டிருந்ததனால்தான் அவன் இவ்வளவு காலம் வரை கெட்ட வழிகளில் செல்லாமல் இருந்து வந்தான். சிறிது காலம் கூட்டுக்கு வெளியே இருந்து விட்டதனால் அவனுக்குப் பயம் சற்றுத் தெளிந்து விட்டது. தன் இஷ்டப்படி பறக்கலாம் என்ற தைரியமும் பிறந்தது. அவனுடைய கண்களுக்கெதிரே புதிய காட்சி மிளிரத் தொடங்கியது. பழைய புறாக்கூண்டின் நினைவு அழிந்தது. அதற்குப் பதிலாக பூத்துக் குலுங்கும் பூந்தோட்டம் கண்முன் நின்றது. அந்தப் பூந்தோட்டத்துக்குள் அடைபட்டிருந்த பொழுதிலும் அவனுக்குச் சுதந்திரத்தில் உள்ள ஆனந்தம் கிட்டுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அப்படியிருக்கும் பொழுது அந்தத் தோட்டத்துக்குள்ளே நடக்கும் கேளிக்கைகளில் கிடைக்கும் ஆனந்தத்தை அவன் ஏன் அனுபவிக்கக் கூடாது?

## நாற்பத்தேழாம் அத்தியாயம்

## 'என்மேல் கோபமா?'

ரமாகாந்த் எவ்வளவுக் கெவ்வளவு ஜோஹ்ராவின் அன்புத் தளையில் கட்டுண்டானோ, அவ்வளவுக் கவ்வளவு போலீஸ் அதிகாரிகளின் கவலையும் குறையலாயிற்று. அவனுக்கு விதிக்கப்பட்டிருந்த நிபந்தனைகளெல்லாம் கூடச் சிறிது சிறிதாகத் தளர்ந்தன. ஒரு நாள் உலாவப் போகும்பொழுது டிபுடி சூபரின்டெண்டே அவனை அழைத்துக் காரில் ஏற்றிக் கொண்டார். அந்தக் கார் தேவீதீன் வீட்டுவாசல் வழியாகப் போய்க்கொண்டிருந்த பொழுது, ரமாகாந்த் யாருடைய கண்ணிலும் பட்டுவிடாமல் இருக்கவேண்டுமே என்பதற்காக நத்தை போலத் தலையை உள்ளே இழுத்துக்

கொண்டான். பத்மா இருக்கிறளா, ஊருக்குப் போய்விட்டாளா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவா அவனை உந்தித் தள்ளத்தான் செய்தது. இருந்த போதிலும் அவனுக்குத் தலையை வெளியே நீட்டத் துணிவு உண்டாகவில்லை. 'தான் போகும் வழி தப்பான வழி' என்பதை நன்கு உணர்ந்திருந்தும், அதை விட அவனுக்கு மனம் வரவில்லை. தேவகியைக் கண்டால்......ஏன்? தெரிந்தவர்கள் யாரைக் கண்டாலுமே அவன் வெட்கித் தலை குனிய வேண்டியவன்தான். அவனால் எவ்விதமான தர்க்கத்தின் ஆதாரத்தையும் கொண்டு தன் கட்சி நியாயமானது என்று நிரூபிக்க முடியாது. ஆகவே தெரிந்தவர்களுடைய முகத்தில் விழிக்காமலேயே இருப்பதுதான் உத்தமமான வழி என்று அவனுக்குத் தோன்றிற்று. அதற்கேற்றாற் போல, அந்த மாபெரும் நகரத்தில் மூன்று பேரைத்தான் அவனுக்குத் தெரிந்திருந்தது. அதனால் அயலாரின் நிந்தனைக்கும் ஏளனத்துக்கும் அஞ்ச வேண்டிய அவசியமும் இல்லாமல் போய்விட்டது.

மோட்டார் எங்கெல்லாமோ சுற்றி விட்டு ஹௌரா பாலத்தில் போய்க் கொண்டிருந்தது. அப்பொழுது யாரோ ஒரு பெண் இடுப்பில் குடத்துடன் படியேறி வருவதை அவன் கண்டான். முகம் தெளிவாகத் தெரியவில்லை. ஆடைகள் அழுக்கேறி யிருந்தன. ஒடிந்து விழுந்து விடுபவள் போல மிகவும் இளைத்திருந்தாள். தூரப் பார்வைக்கு அவளுடைய நடை பத்மாவின் நடையைப்போலிருந்தது. 'பத்மா இந்தப் பக்கம் வருவதற்கு நியாயம் இல்லையே!' என்று அவன் யோசிப்பதற்குள் கார் இன்னும் சிறிது நெருங்கியது. கார் நெருங்க நெருங்க அந்தப் பெண் உருவமும் ரமாகாந்தின் கண்களுக்கு நன்றாகப் புலப்படலாயிற்று. அவனுடைய உள்ளத்திலும் படபடப்பு அதிகரித்தது. அவள் பத்மாவேதான்! ரமாகாந்த் ஜன்னலில் தலையைச் சாய்த்து இன்னும் நன்றாக உற்றுக் கவனித்தான். சந்தேகமே இல்லை, பத்மாவேதான்! அவள் உடம்பு ஏன் இப்படி இளைத்து விட்டது! ஒளி போலச் சதையெல்லாங்கூடச் சுருங்கி விட்டதே! அந்தப் பழைய களை, காந்தி, லாவண்யம், துருதுருப்பு எல்லாம் எங்கேயோ மறைந்து விட்டனவே! அந்தப் பழைய மிடுக்கைக்கூடக் காணோமே!

ரமாகாந்த் ஈரமில்லா நெஞ்சம் வாய்ந்தவன் அல்ல; அவன் கண்களில் நீர் துளித்தது. நான் உயிருடன் இருக்கும் பொழுது பத்மாவின் கதி இப்படி ஆவதா! அவளைத் தேவகியின் தன் வீட்டை விட்டுத் துரத்தி யிருப்பாளோ? அதனால்தான அவள் இந்த கஷ்டங்களுக்கெல்லாம் ஆளாக நேரிட்டிருக்குமோ? சேச்சே! அப்படியெல்லாம் இராது. தேவகியின் அம்மாதிரித்



தயவு தாட்சண்யமின்றி நடந்து கொள்ளுபவனேயல்ல. பத்மா தன் மானம் உள்ளவள். அவள்தான் அவனை அண்டிப் பிழைப்பது நியாயம் இல்லை என்றெண்ணி வெளியேறியிருக்கவேண்டும். ஆமாம், இந்த விஷயங்களையெல்லாம் எப்படி யார்மூலம் விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்?

அதற்குள் மோட்டார் வெகு தூரம் விரைந்தோடி விட்டது. ரமாநாத் மனத்தில் கட்டியிருந்த இன்ப மாளிகைகள் எல்லாம் சுக்கு நூறாகத் தகர்ந்துவிட்டன. துயரமே உருவெடுத்த பத்மா அழுக்கேறிய ஆடைகளுடன் அவன் கண் முன்பு காட்சியளித்தாள். 'யாரிடம் சொல்லுவது? என்ன சொல்லுவது? நம் சொல்லைக் கேட்க இங்கே யார் இருக்கிறார்கள்? தப்பித் தவறிப் பத்மாவின் பெயரைச் சொன்னாலே போதும், நம்மீது மறுபடியும் பழைய தடை உத்தரவுகளைப் போட்டு விடுவார்களே! அப்புறம் வெளியே புறப்படக்கூட முடியாதே! பத்மாவின் முகத்திலே தான் எவ்வளவு ஆழமான துயரச் சாயை படர்ந்திருந்தது! அவள் கண்களில்தான் எவ்வளவு ஏமாற்றம்! அவளுடைய உள்ளத்தின் உருக்கத்தைக் கண்கள் எப்படி எடுத்துக் காட்டின! மொட்டு மலராமலேயே வாடி விட்டது போன்றல்லவா தோன்றிற்று, அவள் மேனியைப் பார்க்கும் பொழுது!'



ரமாநாத் வீட்டில் வந்து உட்கார்ந்து இம்மாதிரியான சிந்தனையில் லயித்திருந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம், ஜோஹிரா, வெகு தளுக்கான ஆடை உடுத்தி கொடி போல் துவண்டு கொடுத்துக் கொண்டு, அன்ன நடை நடந்தவாறே அங்கே வந்து சேர்ந்தாள். ரமாநாத் அவளுடைய வரவை லட்சியமே செய்யவில்லை.

"இன்றைக்கு ஏன் இப்படி ஒரு மாதிரியிருக்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே ஜோஹிரா வெண்ணெய் போன்ற தன் மிருதுவான கைகளை ரமாநாத்தின் தோள்களில் போட்டுத் தன் பக்கம் இழுத்தாள். ரமாநாத் அப்பொழுதும் அவளை லட்சியம் செய்து மறுமொழி சொல்லவில்லை.

"ஏன் இப்படி வருத்தமாயிருக்கிறீர்கள்? என் மேல் ஏதாவது கோபமா?" என்று அன்பு கனிந்த குரலில் ஜோஹிரா மறுபடியும் கேட்டாள்.

ரமாநாத் உணர்ச்சி மேலீட்டின் காரணமாக கம்மிய குரலில், "இல்லை, ஜோஹிரா! உன் மேல் எனக்குக் கொஞ்சமும் கோபம் இல்லை. நீ என்மீது காட்டிவரும் கருணையை நான் என் ஆயுள் முழுவதும் மறப்பதற்கில்லை. என் வாழ்க்கைப் படகு உடைந்து தத்தளித்துக் கொண்டிருந்த காலத்தில் நீ என்னைக் கை கொடுத்துக் காப்பாற்ற முன் வந்தாய். அந்த நன்றியை நான் மறக்க முடியுமா? ஆனால் 'பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்' என்பது பொய்யா மொழி போலும். இன்று வழியில் பத்மாவைக் கண்டேன். அவள் அழுக்கேறிய ஆடை அணிந்து இடுப்பில் குடத்துடன் போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய அந்தப் பரிதாபமான நிலைமையை நினைத்தால் என் நெஞ்சு கொதிக்கிறது. என்னால்தானே அவளுக்கு இந்தக் கஷ்டங்கள் எல்லாம்!" என்றான்.

"ஆமாம், அவள் அந்தக் கிழவன் வீட்டில் அல்லவா இருந்தாள்?" என்று கேட்டாள் ஜோஹிரா.

"ஆமாம், முன்பு அங்கேதான் தங்கியிருந்தாள். ஆனால் அவள் ஏன் அங்கிருந்து போய்விட்டாள் என்பது எனக்குத் தெரியவில்லை. அவளைக் கூப்பிட்டுக் கேட்கலாம் என்று எண்ணினேன். ஆனால் என்னுடன் கூட டிபுடி இருக்கவே, கூப்பிட்டுக் கேட்க முடியவில்லை. அப்படியே நான் கூப்பிட்டுக் கேட்பதாகவேயிருந்தாலும் 'அவள் என்னுடன் முகம் கொடுத்துப் பேசுவாளா?' என்பது சந்தேகமே. ஜோஹிரா, நீ என்னைப் பற்றி உன் மனதுக்குள் என்ன எண்ணிக் கொண்டிருந்தாலும் சரி, 'நீ எனக்கு வேண்டியவன்; என்

மீது நீ அன்பு செலுத்துகிறாய்' என்றுதான் நான் இன்றுவரை எண்ணிக் கொண்டிருக்கிறேன். வேண்டியவர்களிடம் அனுதாபத்தை எதிர்பார்ப்பதும் மனித இயல்பு. என் மனதில் உள்ளதைச் சொல்லுவதற்கு, இங்கே உன்னை விட்டால் வேறு வேண்டியவர்கள் என்று யாரும் எனக்கு இல்லை. என்னை வழிக்குக் கொண்டு வரும் நோக்கத்துடன்தான் போலீஸ்காரர்கள் உன்னை அனுப்பி வைத்தார்கள். ஆனால் அதைக் கடவுளின் கருணை என்றுதான் சொல்ல வேண்டும். நீ என் பரிதாப நிலைமைக்கு இரங்கி என்மீது அன்பு செலுத்தத் தொடங்கினாய். எனக்கும் உனக்கும் இன்று ஏதாவது ஒரு விஷயத்தில் மனத்தாங்கல் ஏற்பட்டு விடுகிறது என்று வைத்துக் கொள். நாளைக்கு நான் ஏதாவது ஒரு விபத்துக்கு ஆளாக நேர்ந்தால் நீ கொஞ்சமாவது அனுதாபப்படமாட்டாயா? பசியினால் வாடி நான் உன்னை நாடி வருகிறேன் என்றால், நீ என்னை நாயினும் கேடு கெட்டவனாகவா நடத்துவாய்? அதற்கு உன் மனம் ஒரு நாளும் சம்மதியாது என்று நான் நிர்மாணமாய்ச் சொல்லுவேன். ஏனெனில் ஒரு தடவை அன்பு குடிகொண்டிருந்த இடத்தை வெறுப்பும் வைராக்கியமும் வேண்டுமானால் ஆக்கிர



மித்துக் கொள்ளலாம். தூய்மை உணர்ச்சிக்கு அங்கே சிறிதும் இடம் இல்லை. ஆகவே ஜோஹிரா, எனக்காக நீ ஒரு காரியம் செய்யக் கூடாதா? நீ மனது வைத்தால் அந்தக் காரியம் வெகு சுலபமாக முடியும். 'பத்மா எங்கேயிருக்கிறாள், என்ன செய்கிறாள், என்னைப் பற்றி என்ன எண்ணிக் கொண்டிருக்கிறாள், ஏன் இன்னும் அவள் ஊருக்குப் போகவில்லை, எப்பொழுது போவதாக உத்தேசம்?' என்பது போன்ற விஷயங்களைத் தெரிந்து கொண்டு வரவேண்டும். அடுத்தபடியாக அவளை எப்படியாவது பிரயாகைக்குப் புறப்பட்டுப் போகும்படியும் செய்துவிட வேண்டும். இந்தக் காரியங்களைச் செய்தால் உனக்குக் கோடிப் புண்ணியமுண்டு. என் ஆயுள் முழுவதும் நீ சொன்னதை எல்லாம் நான் செய்யத் தயார். என்னால் அவளுடைய பரிதாப நிலைமையைக் கண்கொண்டு காணச் சகிக்கவில்லை. அதனால்தான் சொல்லுகிறேன். இல்லாவிட்டால், ஆவது ஆகட்டும் என்று இரவுக்கிரவே எங்கேயாவது ஓடி விடுவதாக உத்தேசித்திருக்கிறேன்" என்றான் ரமாநாத்.

ஜோஹிராவோ வேசி. எத்தனையோ நல்லவர்கள் - கெட்டவர்களுடன் அவள் நெருங்கிப் பழகியிருக்கிறாள். அவளுடைய

*காந்தி அஞ்சலி —11*

## என்றும் விளங்கும் புண்ணியன் நாமம்!

காந்திஜியினால் 'தீனபந்து' என்ற மகுடம் சூட்டப்பட்டவரும், இந்தியாவையே தம்முடைய தாய்நாடாகக் கொண்டு இந்திய மக்களுக்காக உழைத்த உத்தமருமான சி. எப். ஆண்ட்ரூஸ் மகாத்மாஜியைப் பற்றிக் கூறியது:

மகாத்மா காந்தி என்ற ஒருவர் இந்தியாவை ஆள்கிறார். அவருடைய சக்தி ஏகாதிபத்தியத்தின் சக்தியை விட எவ்வளவோ அதிகமானது. புதுடில்லியிலும் மாகாண சர்க்கார் மாளிகைகளிலும் குடிகொண்டுள்ள கவர்னர்களுடைய பெயர்களை ஜனங்கள் மறந்த பிறகு கூட காந்திஜியின் பெயரை மறக்க மாட்டார்கள். குதுப்மினார் முதலியவை மறைந்த பிறகு கூட காந்திஜியின் கதையை ஒரு அவதார புருஷனுடைய கதையாகச் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

மகாத்மா ஓர் ஆத்மிக அரண்மனையைக் கட்டியிருக்கிறார். அதன் அஸ்திவாரம் கடவுள்தான். பக்தி, அன்பு, சேவை - அதன் அலங்காரங்கள். அந்த அரண்மனையின் அமைதியை எதுவும் குலைக்க முடியாது.

கண்களுக்கு 'ஆசாமி எப்படிப்பட்டவன்' என்று அறிந்துகொள்ளும் ஆற்றலும் அபாரமாக இருந்தது. ரமாகாந்துக்கும் மற்றவர்களுக்கும் மாபெரும் வித்தியாசம் ஒன்று இருப்பது போல அவளுக்குப் பட்டது. முதன் முதலில் அவள் அங்கே வரும்பொழுது பணத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டுதான் வந்தாள். ஆனால் நான்கைந்து நாட்கள் ரமாகாந்துடன் நெருங்கிப் பழகிய பிறகு அந்த எண்ணம் அவளைவிட்டு அகன்று விட்டது. பொதுவாகப் பெண்களால் அன்பை அவமதிக்க முடியவில்லை. ரமாகாந்தினிடம் எத்தனையோ குற்றங் குறைகள் இருந்தன. ஆயினும் அன்பு செலுத்தும் பான்மை அபாரமாக இருந்தது. அவன் ஜோஹிராவிடத்தில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசினதேயில்லை. அவள் தன் வாழ்க்கையில் ரமாகாந்தைப் போல் ஒன்று கூட ஒளிக்காமல் உள்ளத்தைத் திறந்து காட்டிய மனிதனை இதுவரை கண்டதில்லை. ஆகவே, அவள் அன்பே உருவெடுத்த ரமாகாந்தைக் கைநழுவ விட விரும்பவில்லை.

அவனுக்கு எப்படியாவது ஆறுதல் சொல்ல விரும்பி அவள், "இந்த அற்ப விஷயத்துக்காகவா இவ்வளவு வருத்தப் படுகிறீர்கள்? உங்களுக்காக இந்த ஜோஹிரா எதையும் செய்யத் தயார். நான் நாளைக்கே பத்மாவைப் பற்றிச் சகல விருத்தாந்தங்களையும் தெரிந்து கொண்டு வந்து சொல்கிறேன். கவலைப்படாதீர்கள்!" என்றாள்.

"நான் ஒரு தடவை அவளை எப்படியாவது பார்த்தால்தான் என் மனதிலிருக்கும் பெருஞ் சுமை இறங்கும் போலிருக்கிறது. அதற்கு ஏதாவது வழி சொல்லேன், பார்ப்போம்" என்று ரமாகாந்த் தீனக் குரலில் கேட்டான்.

"அது மிகவும் சிரமமான காரியம் ஆயிற்றே! என்ன செய்வது?" என்று கவலையுடன் கேட்டாள் ஜோஹிரா.

ரமாகாந்த் ஏதோ சொல்ல வாய் எடுத்தான். அதற்குள் யாரோ அறைக் கதவைத் 'தட தட' வென்று தட்டும் சத்தம் கேட்கவே அவன் பேச்சை நிறுத்திக் கொண்டான். அதைத் தொடர்ந்து, "ரமாகாந்த பாபு, எனக்கும் உள்ளே வருவதற்கு அனுமதியுண்டா?" என்று ஸப்-இன்ஸ்பெக்டரின் குரலும் வந்தது. (தொடரும்)



# அவளுடைய பொக்கிஷம்

அதிக வியாதியினால் விருத்தியடைந்து, புத்திர பாக்கியத்திற்கு ஏங்கிய அருணா டானிக்கை தன் அருமைக் குழந்தையைப் பெரும் பொக்கிஷமாகவும், வரப்பிரசாதமாகவும் கருதுகிறாள்

**பண்டிட் டி. கோபாலாசார்லுவின்**

# அருணா

**கர்ப்பாசயரோக நிவாரணி**

## ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட், மதராஸ் 17.

---




# இருக்கும்படி சீர்திருத்தப்பட்டவை.

ஒரு சைகிளின் உறுதியும் நீடித்து உழைப்பும் அதனுடைய "போர்க்கின்" பலத்தைப்பொருத்தது. ஹிண்ட் சைகிளில் "போர்க்" களும், "பிரேம்" களும் சீர்திருத்தப்பட்டவை. கரடு முரடான பாதைகளில் செல்கையில் ஆட்டத்தையும், அசைவையும் தாங்கும் வண்ணம் அவைகள் பிரத்யேகமாக தயார் செய்யப் பட்டிருக்கின்றன.

எங்கள் எல்லா ஸ்டாக்கிஸ்ட்களிடமும் எப்பொழுதும் விற்பனைக்குக் கிடைக்கும்

HC. 308



# HIND CYCLE

THE TOUGH CYCLE FOR THE ROUGH ROAD

தயாரிப்பவர்கள்:
ஹிண்ட் சைகிள்ஸ் லிமிடெட்
பம்பாய்.

சென்னை இராஜதானிக்கு (சுதேச ஸமஸ்தானங்கள் உள்பட)
சோல் ஏஜண்டுகள்: டி. லக்ஸ் ட்ரேடிங் கம்பெனி, பாலக்கரை, திருச்சி.
பிராஞ்சுகள்: 11, பிராட்வே, சென்னை 13. ஸில்வர் ஜுபிலி பார்க் ரோட், பெங்களூர் சிடி.

உங்கள் கூந்தல் இம்மாதிரி
படியாமலிருந்தால்



அதை ஸ்வஸ்திக்
வாசனையிடப்பட்ட



ஆமணக்கெண்ணெயால்
படியச்செய்யுங்கள்

உங்கள் கூந்தல் சுருட்டையாயும் படியாமலு மிருந்தால் கண்ட தைலங்களால் உங்களுக்கு ஒரு பிரயோஜனமும் உண்டாகாது. ஸ்வஸ்திக் வாசனை கூட்டப்பட்ட ஆமணக்கெண்ணெ, உங்கள் தலை மயிரின் அழகை வெளிப்படுத்தி கூந்தல் நன்றாக வாரிக் கொள்ளும்படி உதவுகிறது. அதி மனோஹரமான வாசனையுடைய நல் ஸ்வஸ்திக் பரிமள ஆமணக்கெண்ணெயை பெரியோர்களும் தெரிந்த ஆடவரும் பெண்டிரும் விரும்பிப் போற்றுகிறார்கள்.

இதர உயர்தர ஸ்வஸ்திக் தயாரிப்புகள் காந்தி ஸோப், ஸ்வஸ்திக் ஆவார ஸோப், சலவை ஸோப்புகள், கோலாலின் பிராந்ட் வனஸ்பதி முதலியன.



வாசனைகூட்டப்பட்ட ஆமணக்கெண்ணெ

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# “எவர் ஸில்வர்”

## பாத்திரங்கள்

வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை

(பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டவை)

●

தென்னிந்தியாவிற்குப் பூரண வினியோகஸ்தர்கள்:

## ஸாம்ஸன் & கோ.

எஞ்சின், எலெக்ட்ரிக் மோட்டார், பம்பு செட் டீலர்கள்

**8/22, பிராட்வே, மதராஸ்**

தந்தி: "BARAPASH"] [போன்: 4521

●

வெளியூரில் கிடைக்குமிடம்:

திருச்சி ஜில்லாவிற்கு:

**S. T. P. R. சிதம்பரம்**

63 வடக்குச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்

மலபார், கொச்சி, திருவனந்தபுரத்துக்கு:

**மெஸர்ஸ் சுரேஷ் & கோ.**

சித்தூர் ரோடு, எர்ணாகுளம் & திருச்சூர்

சேலம் ஜில்லாவிற்கு:

**எஸ். வி. ராமனாதன்**

**C/O சூடாமணி ஸ்டோர்ஸ்**

தில்லைநகரம், நாமக்கல் (சேலம்)

தஞ்சை ஜில்லாவிற்கு:

**எம். வி. எம். ஸ்டோர்ஸ்**

கும்பேஸ்வரர் சன்னதித் தெரு

கும்பகோணம்

சித்தூர், செங்கல்பட்டு, வடஆர்க்காடு, திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், மைசூர், ஹைதராபாத் சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் சப்-டீலர்களாக விரும்புவோர் எழுதவும்.

# நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோதல் கூந்தல்
தைலம்

கூந்தலுக்கு சிறந்த மணமும் மிருந்த வனப்பும் நிறைந்த வளர்ச்சியும் தருகிறது. ஆயிரக்கணக்கான மக்கள் அதையே உபயோகிப்பதன் உண்மையும் அதுவே






கோதல் டிரேட் மார்க் கவனித்து வாங்குங்கள்

## டி. எஸ். ஆர். & கோ.
## கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டு:

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைகிராப்ஸ் ரோடு

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு:

**B. பாலபட்டாபி**

வைசியாள் தெரு, கோயமுத்தூர்

REGD. NO. M. 4392












# ராஜா

ஸ்னோ,
ஹேர் ஆயில்,
கஸ்தூரி ஸோப்.




FAS-10

**MANYAM & CO., BANGALORE — MADRAS — BOMBAY.**

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோதி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல்டிஸ்டிரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ். ஆனா. அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு